# தமிழகத்தில் விடுதலைப் புலிகள்

கோடிக்கரை: பொருள்கள் இங்கிருந்தும் கடத்தப் படுகின்றன!

**'தமிழகத்தில் விடுதலைப் புலிகளின் பயிற்சி முகாம்கள் இருக்கின்றன' என்று எதிர்க்கட்சியினர் அடித்துச் சொல் கிறார்கள். 'இல்லவே இல்லை; நிரூபித்துக் காட்டுங்கள்' என்று ஆணித்தரமாக மறுக்கிறார் முதல்வர். உண்மை நிலை என்ன? சர்வே செய்கிறது இக்கட்டுரை......**

**வே**தாரண்யத்துக்குள் நுழையும் ரோடு களிலெல்லாம் தமிழக காவல் துறையினரின் பலத்த செக்போஸ்ட்கள். ஏதோ யுத்தத்துக் குத் தயாராய் இருப்பது போலச் சுற்றிலும் மணல் மூட்டைகளை அடுக்கிக் கொண்டு, நடுவில் நமது போலீஸார் இயந்திரத் துப்பாக்கிகளோடு நிற்கிறார்கள்.

''இந்த செக்போஸ்ட்களெல்லாம் வெறும் கண் துடைப்பு. விடுதலைப் புலிகள் எங்கள் காவலை மீறி ஒன்றும் செய்ய முடியாது என்று பொது மக்களை நம்பச் செய்வதற் கான அரசாங்கத்தின் முயற்சிகளில் ஒன்றே தவிர நிஜம் அல்ல. நீங்களே கவனித்திருக் கலாம்... செக்போஸ்ட்களைத் தாண்டிச் செல்லும் எந்த வாகனத்தையாவது இவர்கள் சோதனையிட்டிருக்கிறார்களா? கிடையவே கிடையாது. சும்மா பேருக்குத் தான் நிற்கிறார்கள். விடுதலைப் புலிகளும் செக்போஸ்ட் பற்றிய பயமே இல்லாமல் நடமாடிக் கொண்டுதான் இருக்கிறார்கள். தங்களுக்குத் தேவையான, மாருதி ஜீப்கள் உட்பட எல்லாப் பொருள்களையும் தாராள மாக இங்கிருந்து இலங்கைக்கு எடுத்துச் சென்று கொண்டுதான் இருக்கிறார்கள். காவல் துறை மட்டுமல்ல; சுங்கத் துறையும் விடுதலைப் புலிகளைப் பொறுத்தவரை செயலிழந்துதான் நின்று கொண்டிருக் கிறது!'' என்றார் உள்ளூர்ப் பத்திரிகையாளர் ஒருவர்.

**இ**தே கருத்தைத்தான் வேதாரண்யத் துக்கு அருகிலுள்ள ஆறுகாட்டுத்துறை என் னும் மீனவ கிராமத்தின் நாட்டாண்மைக் காரரான பி. எஸ். சேதுபதியும் பிரதிபலித் தார்.

''நமது போலீஸாரெல்லாம் விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டில் இருக்கிறார்களா அல்லது நமது அரசாங்கத்தின் கட்டுப்பாட் டில் இருக்கிறார்களா என்பதே சந்தேகமாக இருக்கிறது! உதாரணத்திற்குச் சென்ற மாதக் கடைசியில் நடந்த ஒரு சம்பவத்தைச் சொல் கிறேன்...'' என்று விளக்க ஆரம்பித்தார், சேதுபதி.

''அன்றைய தினம் இரண்டு விடுதலைப் புலிகள் எங்கள் கிராமத்தில் கரையிறங்கி யிருக்கிறார்கள். அவர்களை எங்கள் கிராம மக்கள் விசாரித்த போது, தாங்கள் இலங்கைக்கு வெடி மருந்துகள் ஏற்றிச் சென்று கொண்டிருப்பதாகவும், வழியில் தங்கள் படகின் இயந்திரம் பழுதுபட்டு விட்டதால் அதைச் சரிசெய்யப் போவதாக வும் அல்லது வல்வெட்டித் துறையிலிருந்து வேறு இயந்திரம் வரும் வரை காத்திருக்கப் போவதாகவும் சொல்லியிருக்கிறார்கள். மேலும், மக்களைத் தாங்கள் ஏதும் செய்ய மாட்டோமென்றும் சொல்லி சகஜமாகப் பழகியிருக்கிறார்கள்.

''இதற்கிடையில் நமது போலீஸாருக்கும் இச் செய்தி எட்டி விட்டது. அவர்களும்



* பி. வி. ராஜேந்திரன்: ''பாதுகாப்பைப் பலப்படுத்திப் பயனில்லை!''



* பி. எஸ். சேதுபதி: ''தமிழக போலீஸ் யாருடைய கட்டுப்பாட்டில்?''

ஆயுதங்களோடு வந்தார்கள். நமது போலீஸைக் கண்ட அந்தப் புலிகள் உடனடியாகத் தங்களிடமிருந்த இயந்திரத் துப்பாக்கிகளைத் தயார் நிலையில் வைத்துக் கொண்டு, 'எங்களுக்கும் உங்களுக்கும் எந்த விதமான பிரச்னையும் இல்லை. எனவே நீங்கள் அனைவரும் பேசாமல் உங்கள் வாகனத்தில் ஏறிக் கொண்டு சென்று விடுங்கள்...' என்று கட்டளையிடுவது போல் சொன்னார்கள். நமது போலீஸாரும் அவர்கள் சொன்னது போலவே பேசாமல் வாகனத்தில் ஏறிச் சென்று விட்டார்கள். இதையெல்லாம் எங்கள் ஊர் மக்களே திரண்டு நின்று வேடிக்கை பார்த்து வியந்து போனார்கள். இதுதான் நிஜமான நிலை...'' என்றார் சேதுபதி.

ஆனால், ''அன்று நடந்த விஷயம் என்பது எங்கள் இயலாமை அல்ல...'' என்று வன்மையாக மறுக்கிறார் வேதாரண்யத்துக்கு ஸ்பெஷல் டூட்டியில் வந்திருக்கும் திருத்துறைப் பூண்டி இன்ஸ்பெக்டர் எஸ். பரமசிவம்.

''அன்றைய சம்பவத்தின் போது போலீஸாருடன் சென்றிருந்தது' நான்தான். அங்கிருந்த விடுதலைப் புலிகளைச் சுற்றி, அக் கிராமத்தைச் சேர்ந்த மக்கள் சுமார் இருநூறு பேருக்கு மேல் நின்று கொண்டிருந்தார்கள். அந்த நிலையில் நாங்கள் விடுதலைப் புலிகளோடு துப்பாக்கிச் சண்டை துவங்கியிருந்தால் நிச்சயம் அதில் அப்பாவிப் பொது மக்களும் பலியாக வேண்டியிருந்திருக்கும். அந்தச் சூழ்நிலையில் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதா வீரம்? விவேகம் காட்டுவதுதான் வீரம்! அதனால்தான் நாங்கள் பின்வாங்கினோம். சொல்லப் போனால் அன்று அவர்களிடமிருந்த ஏ. கே. 47 துப்பாக்கிகள் வெறும் 75 கெஜ தூரமே சுடக்கூடியவை. ஆனால் எங்களிடமிருந்தவையோ 1200 அடி சுற்றளவுக்குச் சுடக்கூடிய திறன் பெற்றவை. இந்த நிலையிலும் நாங்கள் பின்வாங்கினோம் என்றால், எங்கள் உயிருக்குப் பயந்து கொண்டு அல்ல; முழுக்க முழுக்க பொது மக்களின் பாதுகாப்பைக் கருதித்தான்!'' என்றார்.

மேலும், ''எங்கள் செக்போஸ்ட்கள் என்பதெல்லாம் வெறும் கண் துடைப்பே என்பதையும் நான் முழுமையாக மறுக்கிறேன். விடுதலைப் புலிகள் விஷயத்தில் அரசு எங்களுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்துள்ளது. அதன்படியே நாங்களும் கண்காணித்துக் கொண்டிருக்கிறோம். கடலுக்குள் வேண்டுமானால் எங்களுக்குப் போதுமான பயிற்சியின்மை காரணமாக நாங்கள் பலவீனமாக இருக்கலாம். ஆனால் வேதாரண்யத்திலுள்ள நிலப் பகுதிகளைப் பொறுத்தவரை விடுதலைப் புலிகளின் நடமாட்டம் என்பது சுத்தமாகக் கிடையாது என்று உறுதியாகச் சொல்கிறேன்.

''அப்புறம், இங்கிருந்து விடுதலைப் புலிகள் பலவிதமான பொருள்களையும் இலங்கைக்குக் கடத்திக் கொண்டு செல்வதாகச் சொல்வதும் வீண் புரளிதான். கோடிக்கரை செல்லும் வழியில் ஸ்ரீராமர் பாதம் என்று ஓர் இடம் இருக்கிறது. அங்கு கோடிக்கரைக் காடுகளில் வசிக்கும் மான்



* நமது போலீஸாரின் செக்போஸ்ட்: வெறும் கண் துடைப்புக்குத்தானா?



விடுமுறை என்பது ஒரு பெரிய பிரச்னை. எங்கே போக வேண்டும் என்பதை, மனைவி முடிவு செய்கிறாள். எப்போது போக வேண்டும் என்பதை, முதலாளி முடிவு செய்கிறார். எப்படி, எத்தனை நாள் விடுமுறையைக் கழிக்க வேண்டும் என்பதை, வங்கிக் கணக்கில் உள்ள பணம் முடிவு செய்கிறது.

— திபெல் ஸ்பால்டர்.
சேலம் சக்திக் கொடி.

கள் தண்ணீர் குடிப்பதற்காகத் தண்ணீர்த் தொட்டிகள் வைக்கப்பட்டுள்ளன. அவற்றில் தண்ணீர் நிரப்புவதற்காக அவ்வப்போது செல்லும் வாகனங்களைக் கண்டு தான், அவையெல்லாம் விடுதலைப் புலிகள் கடத்திச் செல்வதற்கான பொருள்களை எடுத்துச் செல்வதாகப் புரளிகளைக் கிளப்பி விடுகிறார்கள்....'' என்றார் இன்ஸ்பெக்டர் பரமசிவம்.

இன்ஸ்பெக்டர் பரமசிவம் என்ன தான் உறுதியளித்தாலும் கூடப் பொது மக்கள் அதை முழுமையாக நம்புவதற்குத் தயாராக இல்லை. விடுதலைப் புலிகளுக்குத் தேவையான மிளகாய்ப் பொடியிலிருந்து வெடி குண்டுகள் வரை அனைத்தும் இங்கிருந்துதான் இலங்கைக்குச் சென்று கொண்டிருக்கின்றன என்றும், கடற்கரையோரங்களில் ஆங்காங்கேயுள்ள சில மீனவர்கள் விடுதலைப் புலிகள் தரும் பணத்துக்கு ஆசைப்பட்டு, அவர்கள் கடத்திச் செல்வதற்கு உதவி புரிவதாகவுமே சொல்கிறார்கள். சுங்கத் துறையினர் இதை ஒப்புக் கொள்ளா விட்டாலும் கூட விடுதலைப் புலிகளிடமுள்ள நவீன ரக ஆயுதங்களுக்கு முன்னால் சுங்கத் துறையினரும் செயலிழந்து கிடப்பதாகவே சொல்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால், ''விடுதலைப் புலிகளிடமுள்ள படகுகள் இங்கிருந்து இருபதே நிமிடங்களில் இலங்கைக் கரையை அடைந்து விடும் அளவுக்குச் சக்தி கொண்டவை. அவர்களிடமுள்ள ஒயர்லெஸ் சாதனங்களைக் கொண்டு இங்கிருந்தபடியே சர்வசாதாரணமாக இலங்கையிலிருக்கும் தங்கள் சகாக்களோடு பேசுகிறார்கள். அத்தனை நவீனக் கருவிகள் அவர்களிடம். இந்த நிலையில் நமது போலீஸாரும் சுங்கத் துறையினரும் என்னதான் செய்வார்கள், பாவம்!'' என்று பொது மக்கள் பரிதாபப்படவும் செய்கிறார்கள்!

இதுகுறித்து வேதாரண்யம் எம்.எல்.ஏ. (இ. காங்கிரஸ்) பி. வி. ராஜேந்திரன் என்ன சொல்கிறார்? நேரில் சந்தித்துக் கேட்டோம்.

''பூகோள அமைப்பில் நமக்கு மிக மிக அண்மையில் இருக்கிற இலங்கையில் ஆயுதப் போராட்டம் நடந்து கொண்டிருக்கும் போது, நம்மை எப்படி அது பாதிக்காமல் இருக்க முடியும்? அந்தத் துப்பாக்கிக் கலாசாரம் நம்மிடையிலும் ஊடுருவத்தான் செய்யும். நாம் எத்தனை பெரிய பாதுகாப்பு வேலிகளைப் போட்டாலும் அவற்றையும் மீறி அந்த வன்முறைக் கலாசாரம் வந்தே தீரும். அதை முழுமையாகத் தடுப்பதற்கு ஒரேயொரு வழிதான் இருக்கிறது. அதுதான் இலங்கையில் ஏற்படும் அரசியல் அமைதி. அதைத் தவிர வேறு வழியே இல்லை!'' என்றார் எம். எல். ஏ. ராஜேந்திரன்.

''ஆக விடுதலைப் புலிகளின் ஊடுருவல் இங்கே இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறீர்கள்...''

''அது தவிர்க்க முடியாத ஊடுருவல் என்கிறேன். அதைத் தவிர்ப்பதற்கு இங்கே காவலை அதிகப்படுத்திப் பயனில்லை; இலங்கையில் ஒரு நிரந்தரமான அரசியல் தீர்வு காண நமது அரசு முயற்சி செய்வதொன்றுதான் வழி என்கிறேன்...''

''வேதாரண்யத்தில் விடுதலைப் புலிகளின் பயிற்சி முகாம் இருப்பதாக உங்கள் கட்சித் தலைவர் கூறுகிறாரே, உண்மைதானா?''

''நான் எப்படி கட்சித் தலைமையின் கருத்துக்கு முரண்பாடானதொரு கருத்தைச் சொல்வேனென்று எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று சிரித்தார் பி. வி. ராஜேந்திரன்.

ஆக, தமிழகத்தில் விடுதலைப் புலிகளின் பயிற்சி முகாம்கள் இருக்கின்றனவா, இல்லையா? இந்தக் கேள்விக்கு ஒரே வரியில் பதிலளிப்பது கஷ்டம். இருப்பினும் தமிழகத்தின் தெற்குக் கடற்கரையோரப் பகுதிகளில், விடுதலைப் புலிகளின் நடமாட்டம் சர்வ சாதாரணமாகவே இருக்கிறது. அவர்கள் தங்களின் அன்றாட அலுவல்களை எந்த விதமான இடையூறுகளுமின்றிக் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். நமது போலீஸாரும் சுங்க அதிகாரிகளும் அது பற்றி ஒன்றும் செய்ய இயலாமல் இருப்பதற்குக் காரணம், அவர்களோடு மோதுகிற அளவுக்கு நவீன ஆயுதங்களும் பயிற்சிகளும் பெறாமல் இருக்கிறார்கள் என்பது மட்டுமல்ல; இதுவரை மேலிடத்திலிருந்து ஒரு தெளிவான — உறுதியான உத்தரவேதும் பெறாமலிருப்பதுதான் மிக முக்கியமான காரணம்.

விடுதலைப் புலிகள் சென்ற வாரம் சென்னையில் நடத்திய படுகொலைகளுக்குப் பிறகு முதல்வர் போட்ட உத்தரவாவது உறுதியானதாக இருக்க வேண்டும். இல்லையெனில் பஸ்மாசுரனுக்கு வரம் கொடுத்த சிவபெருமானின் கதைதான் நமக்கும்!

— இளங்கோவன்.

படங்கள்: சுபா.

# தேவை!

## அமெரிக்காவில் வேலைக்கு ஆட்கள் தேவை!

* படிப்பு அற்றவரா? எஸ்.எஸ்.எல்.சி., +2. டிகிரி முடித்தவரா?
* சமையல் தெரிந்தவரா?
* சிகை அலங்காரக் கலை அறிந்தவரா?
* தங்கம் - வெள்ளி வேலை தெரிந்த கலைஞரா?
* ஒரு தொழிற்பயிற்சியும் இல்லாமல் எடுபிடி வேலை மட்டும் அறிந்தவரா?
* ஆணோ, பெண்ணோ

உங்களுக்கு அமெரிக்க நாட்டில் வேலை காலி உள்ளது.

ஒரு மணி நேரத்திற்கு குறைந்த பட்சக் கூலி ரூ.100!

முழு விபரங்களுக்கு 'தினமலர் - வாரமலர்' இதழில் ஜூலை முதல் தேதி ஆரம்பமாகும்,

அந்துமணி-யின் பயணக்கட்டுரையைப் படியுங்கள்!



# நான் என்றும் அண்ணா வழியில் செல்பவனே!

— முன்னாள் அமைச்சர் ராமகிருஷ்ணன் பேட்டி

அன்றைய தினம் அப்படியொன்றும் வித்தியாசமாக விடிந்துவிடவில்லை. ஜூன் பதினாறு. வழக்கம் போல் காலையில் எழுந்து தம் பணிகளைக் கவனித்துவிட்டு, பார்வையாளர்களைச் சந்திக்கிறார் ஆதி திராவிடர் நலத் துறையமைச்சர் டாக்டர் ராமகிருஷ்ணன். பின்பு காலை உணவினை முடித்துவிட்டுக் கோட்டைக்குச் செல்கின்றார். அப்போது கூட எந்தவிதமான நெருடலும் தெரியவில்லை. மதியம் வீடு திரும்பிய பின்னர் சுமார் இரண்டு மணி வாக்கில் அமைச்சரின் ஜூனியர் பி. ஏ. ஒருவர் வந்து அமைச்சரிடம் ஏதோ சொல்கின்றார். அது அமைச்சருக்குப் பயங்கர அதிர்ச்சியை ஏற்படுத்திய போதிலும் ஒரு வேளை வதந்தியாக இருக்கும் என்று தம்மைத் தாமே சமாதானம் செய்து கொள்கின்றார். மதியம் மூன்று மணி. கிரீன்வேஸ் சாலையில் உள்ள பங்களாவில் கட்சியைச் சேர்ந்த நண்பர்களுடன் அமைச்சர் அமர்ந்து உற்சாகமாகப் பேசிக் கொண்டிருக்கிறார். அப்போதுதான் அந்த உற்சாகத்தை உடைக்க அந்த ஆள் வந்தார் — ராஜ்பவனிலிருந்து ஸ்பெஷல் மெஸெஞ்சர். 'தாங்கள் அமைச்சர் பதவியிலிருந்து நீக்கப்படுகின்றீர்கள்' என்ற கவர்னரின் கடிதம் காக்கி உறைக்குள்ளிருந்து வெளிப்பட்டு, மகா வேதனையை ஏற்படுத்துகிறது. அந்த அரை மணி நேரம் அமைச்சருக்குக் கைகால் ஓடவில்லை. வெளியில் சொல்ல முடியாத வேதனை!

மாலைப் பத்திரிகைகளில் செய்தி வெளியாகி, புதிய ஆதி திராவிட நலத்துறை அமைச்சரின் பெயரும் வந்தாயிற்று. உடனே இராமகிருஷ்ணன் கலைஞரை அவர் வீட்டில் சென்று சந்திக்கிறார். "நான் என்னையும் அறியாமல் ஏதாவது தவறு செய்திருந்தால் மன்னிக்க வேண்டும், தலைவரே!" ராமகிருஷ்ணன் கண்களில் நீர் மல்க, கலைஞரின் கைகளை இறுகப் பற்றிக் கொள்ள, கலைஞர் அவர் முதுகில் தட்டிக் கொடுக்கிறார்.

அன்றைய அனுபவத்தினை ஒருவிதப் படபடப்புடன் பேசிக் கொண்டிருந்த ராமகிருஷ்ணனிடம், "நான் அறிஞர் அண்ணாவின் வழியில் பயணம் செய்பவன்; அவ்வழியில் என்னைத் தொடர முடியாதவர்களை நான் சிரமப்படுத்த விரும்பவில்லை" என்று அமைச்சர் நீக்கம் குறித்துக் கலைஞர் குறிப்பிட்டுள்ளது பற்றிக் கேட்டோம்.

"முதலில் ஒன்றை உங்களுக்குச் சொல்லி விடுகிறேன். அமைச்சர் பதவி என்பது நான் எதிர்பார்க்காத ஒன்று. தலைவராகப் பார்த்துக் கொடுத்தார். இப்போது அவராகவே என்னை நீக்கியுள்ளார். தலைவரோடு எந்தக் கருத்து வேறுபாடும் எனக்குக் கிடையாது. நான் தலைவருக்குக் கட்டுப்பட்டவன். அவ்வளவுதான்; வேறுஒன்றும்சொல்வதற்கு இல்லை.

"நான் போட்டியிட்ட என் சொந்தத் தொகுதியான அச்சிறுப்பாக்கத்தில் முப்பதாயிரம் வோட்டுக்கள் வித்தியாசத்தில் ஜெயித்தேன். என்னை எதிர்த்துப் போட்டியிட்ட எட்டு பேர்களுக்கும் டெபாஸிட் போய் விட்டது. கலைஞருக்கு அடுத்தபடியாக அதிக வோட்டில் ஜெயித்தேன். என்னைப் பொறுத்தவரையில் அண்ணாவின் கொள்கைகளான கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, சீரிய பணி, இவற்றை நான் கடைப்பிடித்து வந்ததாகவே கருதுகின்றேன். எனக்கென்று எந்தக் கோஷ்டியோ கூட்டமோ கிடையாது. பின்பு எதற்காகப் பதவியைப் பறித்தார் என்று கேட்கிறீர்கள்! அதற்கு எனக்குச் சரியான பதில் தெரியவில்லை! எது எப்படியிருப்பினும் நான் கலைஞரின் அடிமட்டத் தொண்டன். இப்போது என்னுள் ஒரு வெறி உண்டாகியிருக்கிறது. கலைஞர் என்னை மனமாரப் பாராட்டுகின்ற வகையில் கட்சிக்காக உழைக்கப் போகிறேன். நான் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவன். இனி என் பணி முழுவதும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் அவர்களின் வாழ்க்கைத் தரத்தினை உயர்த்துவதற்கும் பாடுபடுவதாகவே இருக்கும். எப்படி இங்கு வந்தேனோ அதே போல் — அமைச்சரின் பங்களாவைக் காலி செய்துவிட்டு — என் சொந்த ஊரான பெரும்பாக்கத்துக்குச் செல்கிறேன்" என்று மிகவும் உணர்ச்சி பொங்கக் கூறினார், முன்னாள் அமைச்சர் ராமகிருஷ்ணன்.

— பாரதிபாலன்.

படம்: சுபா..

புதிய அமைச்சர் சுந்தரம் பேட்டி —

# "என்னைப் பிரமிக்க வைத்து மதிப்பில் உயர்ந்தவர் கலைஞர்!"

புதிதாய் ஆதிதிராவிட நலத்துறையின் அமைச்சராகியுள்ள கே. சுந்தரம், பொன்னேரிக்காரர். வயது நாற்பது. "ஒரு சாதாரணத் தொண்டன்கூட, தகுதியிருந்தால் அமைச்சரவையில் இடம்பெற முடியும் என எங்கள் தலைவர் நிரூபித்திருக்கிறார்," என்கிறார் சுந்தரம், தாம் மந்திரியானது குறித்து.

பதினெட்டு வயதில், அரசியலில் ஈடுபாடு ஏற்பட்டு, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு கைதானவர். பொன்னேரியில் அரசு கல்லூரியில், பி.யு.சி. முடித்தபின் தனியார் நிறுவனம் ஒன்றில் கிளார்க் ஆக மூன்றாண்டு காலம் வேலை பார்த்தார். பிறகு அதை ராஜினாமா செய்து விட்டு, முழுநேர அரசியல்வாதியாகி விட்டார்.

"எமர்ஜென்சியின் போது கணக்கிலடங்காத் தி. மு. க. வினர் கைதாகிவிட, கைதானவர்கள் பட்டியலைக்கூட முரசொலியில் வெளியிட முடியாமல் சென்சார் கெடுபிடி. கலைஞர் சாமர்த்தியமாக, "அண்ணா பிறந்த நாளன்று அண்ணா சமாதிக்கு வர இயலாமற் போனவர்கள் பட்டியல்" என்று கைதானோர் பட்டியலை வெளியிட்டது என்னைப் பிரமிக்க வைத்தது. என்னைக்கூடக் கைது செய்து, பொன்னேரி சப்-ஜெயிலில் வைத்திருந்தார்கள்," என்று நினைவுகூர்கிறார் புதிய அமைச்சர்.

"என் திருமணத்துக்குத் தலைவர் தேதி கொடுத்து விட்டார். ஆனால், திருமண நாளன்று இலங்கைப் பிரச்னை குறித்து, ஜி. பார்த்தசாரதி தலைவரைச் சந்திக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 'வாழ்க்கையில் ஒரு முறை நடக்கும் திருமணத்துக்கு, என் தலைவர் வரமுடியாது போய்விட்டதே!' என நான் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தபோது, கொடுத்திருந்த நேரத்துக்குச் சுமார் ஒன்றரை மணி நேரம் முன்னதாகவே வந்து, எனது திருமணத்தை நடத்திக் கொடுத்துவிட்டுப் பிறகு இலங்கைப் பிரச்னை குறித்துப் பேச உடனே திரும்பிச் சென்றார் கலைஞர். இவ்வாறு தலைவர் என் மதிப்பில் உயர, நடந்த நிகழ்ச்சிகள் எத்தனையோ" என்கிறார் அமைச்சர்.

"அமைச்சராக நியமிக்கப்பட்ட தகவல் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?"



"பொன்னேரிக்குப் பக்கத்தில் உள்ள ஊத்துக்கோட்டையில் ஒருவரைச் சந்திக்கச் சென்றிருந்தபோது, அங்கே போலீஸ் ஒயர்லெஸ் மூலமாக உடனடியாய் முதல்வரைச் சந்திக்கும்படி தகவல் வந்தது. 'தலைவர் எதற்காகக் கூப்பிடுகிறாரோ' என்று சஸ்பென்ஸ் கலந்த பய உணர்வுடன் நான் சென்னை வந்து, முதல்வர் இல்லம் சென்றேன். முதல்வரின் உதவியாளர் என்னிடம் தகவலைச் சொன்னார். அதன்பின் முதல்வரைச் சந்தித்தேன்."

"மந்திரிசபை விஸ்தரிப்பு என்றில்லாமல், ஒரு குறிப்பிட்ட அமைச்சரை விலக்கிவிட்டு, உங்களுக்கு அந்தப் பொறுப்பைக் கொடுத்திருக்கிறாரே! இதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று நாம் கேட்டதற்கு, அமைச்சர் பதில் ஏதும் சொல்லாவிட்டாலும், அவருக்குப் பக்கத்திலிருந்தவர், "இந்த மாதிரிச் சிக்கலான கேள்விகள் கேட்டு, அண்ணனை வம்பில் மாட்டிவிட்டு விடாதீர்கள். பேட்டியை இதோடு முடித்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டார்!

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி.



* ரூபிணி: புதுமுகங்கள் பற்றிப் புதிய சிந்தனை.

## சினி சிப்ஸ்

# புதுமுகங்களுடன் நடிப்பதற்குப் போட்டி!



* ஜி. பி. கிருஷ்ணா: வெள்ளிவிழா அளவுக்கு...

●● சுஹாசினியின் 'பெண்' டி.வி. சீரியலுக்கு ஒளிப்பதிவு செய்திருப்பவர் ஜி.பி. கிருஷ்ணா. சினிமாவுக்குச் செய்வது போல அதிக செலவு செய்து ஸ்பெஷல் லைட்டிங் பண்ணி ஒளிப்பதிவு செய்துள்ளார். ''இந்த சீரியல் ஒரு வெள்ளி விழாப் படத்திற்கு ஒளிப்பதிவு செய்த அளவுக்கு எனக்கு நல்ல பெயரை வாங்கிக்கொடுத்துள்ளது'' என்று பெருமிதமாகக் கூறுகின்றார் கிருஷ்ணா. இவர் பிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர். பி. சி. ஸ்ரீராமிடம் உதவியாளராக இருந்தவர். அடுத்து சுஹாசினி இயக்கும் படத்திற்கு ஒளிப்பதிவு செய்யப் போகிறார்.

●● மாஜி மந்திரி திருநாவுக்கரசு தற்போது சினிமாவில் பிஸி! 'மருதுபாண்டி'யை அடுத்து கார்த்திக்கைக் கதாநாயகனாகப் போட்டு 'ஜன்ம பூமி' என்ற படத்திற்குப் பூஜை போட்டு வேலையையும் துவங்கி விட்டார். திருநாவுக்கரசு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியில் அவரின் அப்பா கலந்து கொண்டால் அது நிச்சயம் வெற்றி பெறுமாம். எனவே இந்தப் படத்திற்குச் சொந்த ஊரிலிருந்து அப்பாவை அழைத்து வந்து பூஜை போட்டார். 'மருது பாண்டி' படத்திற்குக் கதை எழுதிய திருநாவுக்கரசு, எடிட்டிங் போன்ற டெக்னிக்கல் விஷயங்களிலும் முழுவதுமாக ஈடுபட்டார். விரைவில் ஒரு படத்தினை டைரக்ட் செய்யும் உத்தேசமும் உண்டாம். அரசியல் அஸ்தமனங்களின் போது சிலருக்குச் சினிமாதான் குளிர் நிலவைப் பொழிகிறது!

●● 'கவிதை பாடும் அலைகள்' படம் மூலம் நடிகராக அறிமுகமான (நடிகை சீதாவின் தம்பி) ராஜ்மோகன், ''நம்பரங்களுக்குச் கள்ளு' என்ற மலையாளப் படத்தில் நடிக்கின்றார். இந்தப் படத்தில் இவருக்கு இரண்டு ஜோடிகள்: ஒன்று ரஞ்சனி மற்றொன்று அந்தப் பட டைரக்டர் — ஏ. என். தம்பியின் மகள் — கவிதா தம்பி. தமிழ்ப் படத்தில் சான்ஸ் தேடிய போது 'முடியை ஒட்ட வெட்டிக்கொண்டு வா' என்று கூறினார்களாம். மலையாளத்தில் 'முடியை நன்றாக வளர்த்துக் கொண்டு வா என்று கூறினார்களாம்!' முடி வளரும் வரை ஷூட்டிங்கைத் தள்ளிப் போட்டார்கள் என்கிறார் ராஜ்மோகன்!



* திருநாவுக்கரசு: பூஜையில் அப்பா உண்டு.



* ராஜ்மோகன்: முடிப் பிரச்னைக்கு முடிவு.

●● ஒரு காலத்தில் கதாநாயகன் புதுமுகம் என்றால் பாப்புலர் நாயகிகள் ஓடிப் போவார்கள். இன்று புதுமுகங்களுடன் நடிக்க ஏக போட்டி! புதுமுகங்களுடன் நடித்தால்தான் நடிகைகளுக்குத் தனி மவுசு கிடைக்குமாம். 'நான் வளர்த்த பூவே' படத்தின் புதுமுகம் குரு ராஜன் என்றவுடன் மறுப்புச் சொல்லாமல் ஒப்புக்கொண்டார் ரூபிணி. இந்தப் படத்தின் டைரக்டர் ராஜேஷ் கண்ணா, கதை, வசனம், டைரக்ஷன், பாடல்கள், இசை, ஒளிப்பதிவு என்று சகலத்தையும் தம் தலையில் போட்டுக் கொண்டு, ராஜேந்தர் பாணியில் இறங்கியுள்ளார்.

— எஸ். பாலு.

# சிவப்பு விளக்குப் பகுதிப் பெண்களை மீட்டுவந்தது சாதனையா?

இந்திய தேசிய பெண்கள் சம்மேளனத்தின் சென்னை மாவட்டச் செயலாளர் கோமதி கண்ணப்பனிடம் கேட்டோம்:

"சென்னை ஓட்டல் ஒன்றில் காபரே நடனத்தில் பெண்களை ஈடுபடுத்துவதாகக் கேள்விப்பட்டு எங்கள் அமைப்பு அந்த ஓட்டல் வாசலில் போராட்டம் நடத்தியது. காபரே நடனம் ஆடும் பெண்களுள் ஒருத்தி ஓட்டலிலிருந்து வெளிப்பட்டார். நேராக வந்து எங்களிடம் பேசினார். தன்னை நம்பி ஒரு பெரிய குடும்பம் இருப்பதாகவும் தனக்குக் கல்வித் தகுதியும் வேலை வாய்ப்பும் இல்லை என்பதால் இங்கு நடனமாடுவதைத் தவிர குடும்பத்தைக் காப்பாற்ற வேறு வழி இல்லை என்றும் கூறினார். "உங்கள் போராட்டம் எனக்கு எந்த விதத்திலும் உதவப் போவதில்லை" என்று அவர் முகத்தில் அடித்தாற்போலச் சொன்னதை மறக்கவே முடியாது.

"எந்தப் பிரச்னையையும் அதற்கான காரணத்தோடு சேர்த்து ஆராய்ந்து, அணுக வேண்டும் என்பதை எங்களுக்கு உணர்த்தியது சில ஆண்டுகளுக்கு முன் நடந்த இந்தச் சம்பவம்.

"சமீபத்தில் தமிழக அரசு, பம்பாய் சிவப்பு விளக்குப் பகுதியிலிருந்து விடுவித்து வந்த பெண்கள் அதிருப்தி தெரிவித்திருப்பதாகச் செய்தித் தாள்களில் படித்த போது எனக்கு மேற்படி சம்பவம்தான் நினைவுக்கு வந்தது. விடுதியில் தங்கவும் மருத்துவ பரிசோதனை செய்து கொள்ளும் வரை காத்திருக்கவும் இஷ்டமில்லை என்று அப்பெண்கள் தெரிவித்திருக்கிறார்கள். தமிழக அரசு ஏன் எங்களை அழைத்து வந்தது என்று கூடக் கேட்டிருக்கிறார்கள்.

"இத்தகைய அதிருப்திக்குக் காரணம் அரசின் அணுகு முறைதான் என்று நான் கருதுகிறேன். இந்தக் காரியத்துக்கு இவ்வளவு விளம்பரம் தேவையேயில்லை. சிவப்பு விளக்குப் பகுதிப் பெண்களுக்குச் சமூகத்தில் எத்தகைய 'அந்தஸ்து' தரப்படுகிறது என்பது எல்லோரும் அறிந்ததே. அப்படியிருக்கையில் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் ரசனைக்குறைவான ஆர்வத்துடன் பத்திரிகையாளர்களும் பொது மக்களும் குவிந்து வேடிக்கை பார்க்க அனுமதித்திருக்கலாமா?! பத்திரிகைகள் இதுதான் சாக்கு என்று அப்பெண்மணிகளின் 'கண்ணீர்க் கதை' என்ற போர்வையில் பக்கம் பக்கமாக விரசங்களை விவரித்தன. ஒரே பரபரப்பு சில நாட்களுக்கு....

"சிவப்பு விளக்குப் பகுதிப் பெண்களுக்கு மறுவாழ்வு கொடுப்பது தான் நோக்கமெனில் அவர்களுடைய பழைய வாழ்க்கையை எல்லோருக்கும் தம்பட்டம் அடிப்பதன் மூலம் எவ்வாறு செய்ய முடியும்!

"சென்னைக்கு அழைத்துவரப்பட்ட பெண்கள் சிறைச்சாலை போன்ற இடத்தில், அடிப்படை வசதிகள் கூட இன்றித் தங்க வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்று குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. இவர்களுள் பலருக்கு எய்ட்ஸ் இருப்பதாகச் சந்தேகிப்பதால்தான் இவ்வளவு பலத்த காவல் என்கிறார்கள். சமூகநல அமைப்புக்களைச் சேர்ந்தவர்களும் மாதர் அமைப்பினரும் இப்பெண்களுடன் பேசி எய்ட்ஸ் பற்றி எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம். மனவியல் நிபுணர்களைக் கொண்டு இப்பெண்களிடம் பேசச் சொல்லி இவர்களுடைய அச்சங்களைப் போக்கி, தன்னம்பிக்கையூட்ட வேண்டும். ஆனால், யாருமே இப்பெண்களைச் சந்திக்கக் கூடாது என்று அரசு உத்தரவிட்டிருக்


● கோமதி கண்ணப்பன்.

கிறது.

"மனத்தாலும் உடலாலும் பெரும் பாதிப்புக்கு ஆளாகியிருக்கும் இப் பெண்களை நல்ல முறையில் பராமரிக்க வேண்டும். நல்ல சூழ்நிலையில் தங்கவைக்க வேண்டும். அவர்களுக்குப் பிழைப்பதற்கு உடனடியாக மாற்று ஏற்பாடு செய்து தர வேண்டும். சுய தொழில், கைத் தொழில் போன்றவற்றில் ஈடுபடுத்தி மூளைக்கும் உடம்புக்கும் உழைப்பு வழங்க வேண்டும். தயாராகும் பொருள்களின் விற்பனையை அரசாங்கம் மேற்கொள்ளலாம்." என்றார் கோமதி கண்ணப்பன்.

இந்த மீட்பு நடவடிக்கையை முன் கூட்டியே திட்டமிட்டுத்தான் அரசாங்கம் காவல் துறையைக் கொண்டு நடத்தியிருக்கிறது. அப்படி திட்டமிட்ட போது கூடவே புனர்வாழ்வு திட்டங்களும், பரிசோதனை ஏற்பாடுகளும் இணையாகத் திட்டமிடப்பட்டு விரைவாகவும் பிரசாரமின்றியும் நிறைவேற்றப்பட்டிருந்தால் பிரச்னை ஏதும் இருந்திருக்காது. ஆனால் பரிதாபத்துக்குரிய இந்தப் பெண்களை மீட்டு வந்ததே ஒரு சாதனை என்பதாக அரசு காண்பித்துக் கொள்ள விரும்பியதுதான் கோளாறுகளுக்குக் காரணமாகி விட்டது.

— பௌத்தாயினி.

# சுவர்ணபுரி வரதராஜர்

தஞ்சை மாவட்டத்தில் சோழ சூடாமணி ஆற்றங்கரையில் அமைந்திருக்கிறது செம்மங்குடி. எந்த செம்மங்குடி என்று கேட்கிறீர்களா? ஆமாம், ஆமாம்! சங்கீத வித்வான் செம்மங்குடி ஸ்ரீநிவாஸ அய்யர் அவர்களுடைய ஊரேதான்!



செம்பொன்குடி என்பதுதான் செம்மங்குடியாக மருவி வழங்குகிறது. சுவர்ணபுரி என்றும் அழைப்பர்.

கிழக்கே சிவன் கோயில். மேற்கே பெருமாள் கோயில். செம்மங்குடியில் தங்க நேர்ந்தால் பொழுது புலருமுன்னரே மணியோசை கேட்டுக் கண் விழிக்கலாம். வாசலுக்கு வந்தால் நம்மைப் போலவே ஊர் ஜனங்கள் எல்லோரும் அவரவர் வீட்டு வாசலில் நிற்கக் காண்போம். மேற்கே திரும்பினால் திடீரென்று திரை விலக பெருமாள் காட்சி தருவார். அடுக்குத் தீபம் பொன் முத்துக்களாக ஜொலிக்கும்.

ஸ்ரீதேவி பூதேவி ஸமேதராக, நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளியிருக்கும் வரதராஜப்பெருமாளுக்குச்சகலவித பூஜைகளும் உற்சவங்களும் தவறாமல் நடந்து வந்த போதிலும் ஆலயம் மிகவும் சிதிலமாகி இருக்கிறது.

கோயிலை முற்றிலுமாகப் பழுது பார்த்துப் பின்னர் கும்பாபிஷேகமும் நடத்த ஒரு திருப்பணி கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது. இதன் தலைவர், வேறு யார்? செம்மங்குடியேதான்.

பெருமாள் பக்தர்களும் செம்மங்குடி ரசிகர்களும் இந்தத் திருப்பணியில் தவறாமல் பங்கு கொண்டு இறையருளை அடைய வேண்டும். காஞ்சி, சிருங்கேரி பீடாதிபதிகளின் அனுகிரஹத்தையும் பெற வேண்டும்.

நன்கொடை அனுப்ப முகவரி:

எஸ். வி. ஜெயராமன்,
பொருளாளர்,
இறைவன் நற்பணி மன்றம்,
செம்மங்குடி., S.O. 612 603
கும்பகோணம் R. M. S.

# சென்னையில் மெக்ஸிகோ!



உலகம் உருண்டையானது என்பதால், ஒருவர் இந்தியாவில் பூமியைக் குடைந்து கொண்டு போய் மறுபுறம் வெளியேற முடியு மானால் தாம் மெக்ஸிகோவில் இருப்பதைக் காண்பார். எனவே தரை மார்க்கமாகச் சென்றால் நம்மிடமிருந்து மிக அதிகமான தூரத்தில் இருப்பது மெக்ஸிகோ. ஆயினும் மெக்ஸிகோவுக்கும் இந்தியாவுக்கும் இடையே அதிசயமான ஒற்றுமைகள் பல உண்டு.

மெக்ஸிகோவின் அஸ்டெக், இன்கா நாகரிகத்துக்கும் நமது இந்து சமவெளி நாகரிகத்துக்கும் (மொகஞ்ஜதாரோ) இடையே பல ஒற்றுமைகள் இருப்பதாக தொல் பொருள் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். நம் முன்னோர்கள் சூரியனை 'இரவி' என வழங்கினால் 'ரா' என்பது மெக்ஸிகோவின் பண்டைய சூரிய தெய்வத்தின் பெயர். அவர்கள் ஆலயங்களிலும் நமது கோபுரங்களைப் போலவே அடி பருத்துப் படிப்படியாக நுனி சிறுக்கும் அமைப்பு.

பண்டைக் காலத்தை விட்டு விட்டுத் தற்காலத்துக்கு வந்தால் அவர்கள் தேசக் கொடியிலும் நம் நாட்டுக் கொடியின் சிவப்பு, வெள்ளை, பச்சை நிறங்களே குறுக்குப் பட்டைகளாக இருக்கின்றன — நடு வெள்ளையில் கழுகுச் சின்னம்.

**உ**ணவு விஷயத்திலும் பல ஒற்றுமைகள் உண்டு என்பது தாஜ்கோரமாண்டல் ஏற்பாடு செய்திருந்த மெக்ஸிகோ உணவு விழாவில் தெரிய வந்தது!

மெக்ஸிகோ நாட்டின் சூழ்நிலையை வரவழைப்பதற்காகச் செய்து வைக்கப்பட்டிருந்த கூண்டு வண்டியும், அதிலிருந்து தொங்கிய அரிக்கேன் விளக்குகளும் நமக்குப் பரிச்சயமான கிராமப்புறத்தையே நினைவூட்டின. மிதந்து வந்த இசையில் கூட நம் நாட்டுக் குறவஞ்சியின் அலட்சியத் துள்ளல் தெரிந்தது. உணவு பரிமாறிய சிப்பந்திகள் மெக்ஸிகோ நாட்டு 'பாஞ்சோ' சால்வையையும் 'ஸாம்ப்ரேரோ' போன்ற தோற்றமுடைய தொப்பிகளையும் அணிந்திருந்தனர். சமைத்து வைத்திருந்த உணவு வகைகளின் நடுவிலே தோசைக் கல்! அதில் சப்பாத்தி போன்று ஏதோ செய்து வாட்டி எடுத்துக் கொண்டிருந்தார் தலைமைச் சமையற் கலைஞர் நடராஜன்.

''சோள மாவால் செய்யப்படுகிறது இந்தச் சப்பாத்தி போன்ற ''டார்ட்டியர்ஸ்'' **(tortillos)**. இதுதான் மெக்ஸிகோ நாட்டினரின் முக்கிய உணவு'' என்றார் நடராஜன். ''இதில் இறைச்சி அடைத்துப் பொரித்தெடுத்தால் 'டாகோஸ்'. பழக் கூழை மேலே வைத்து உண்டால் ''டோஸ்டதாஸ்.'' முதலில் வாட்டி விட்டுப் பிறகு காய்கறி, தக்காளி சாஸ், சீஸ் ஆகியவற்றைச் சேர்த்து 'பேக்' செய்தால் ''என்சிலாடாஸ்'' என்று பல ரகங்களை அடுக்கினார். எல்லாம் நம்முடைய பராத்தா, நான் போன்றவற்றின் புது வடிவங்கள்தான்.

குடமிளகாய், பச்சை மிளகாய், சிவப்பு மிளகாய், தேங்காய், ஆகியவை அவர்கள் சமையலிலும் அதிகமாகச் சேர்க்கப்படுகின்றன. மண் பாண்டங்களில் சமைத்துச் சாப்பிடுவது, சமையல் மசாலாக்களை அம்மியில் அரைப்பது போன்றவையெல்லாம் நம்மூர் மாதிரியே! நடராஜன் காட்டிய மெக்ஸிகோ நாட்டுச் சமையற்கலைப் புத்தகத்தில் நம் பாட்டிகள் பயன்படுத்தும் வெற்றிலை இடிக்கும் உரல் கூட இருந்தது!

''காரசாரமான உணவு எனில் நம் நாட்டை விட்டால் அடுத்தது மெக்ஸிகோ தான்'' என்ற தாஜின் விற்பனை மேலாளர் ரவிசங்கர், ''ஒற்றுமைகள் இந்த மட்டில் நிற்கட்டும். பண வீக்கத்தில் நாம் மெக்ஸிகோவோடு போட்டி போடாமல் இருந்தால் சரி'' என்றார்.

தினந்தோறும் விலைவாசிகளுடன் போராடும் நமக்கு அவரது கவலையை நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

— நிர்மலா சக்கரவர்த்தி


விடுதலைப் புலிகள்
எங்களோட
வீர வணக்கம்
இப்படித்தான்...
கோடம் பாக்கம்
படுகொலைகள்


அன்று...
வைகோ!
சிங்கக் குட்டி
என்ன அழகு...
வளர்க்கிறேன்!
தார்மீக


இன்று...
உர்ர்ர்...


37 பேரைக் கொண்ட உயர்நிலைக் குழு
அ.தி.மு.க.
சமர்த்தா
தேரை
இழுத்திடுப்
போங்க
பார்க்கலாம்!



ஓம்
கல்கி
1990 ஜூலை 1
மலர் : 48 இதழ் 48
பிரமோதூத ஆனி 17



# கோடம்பாக்கம் படுகொலைகள்

கோடம்பாக்கத்தில் நடந்த படுகொலைகள் குறித்து தில்லியிலிருந்தபடி அனுதாப அறிக்கை விட்டிருக்கிறார் கருணாநிதி. நமக்கும் மடிந்தவர்கள் பால் அனுதாபம்தான்; அவர்கள் உறவினர் பால் இரக்கம்தான். ஆனால், இந்த அனுதாபத்தை மீறி முதல்வர் மீது நமக்குக் கோபமும் வருகிறது.

எத்தனை எச்சரிக்கைகள்! பத்திரிகைகள் கட்டுரைகள் எழுதின, கார்ட்டூன்கள் போட்டன, தலையங்கங்கள் பிரசுரித்தன. ரா என்ற மத்திய அரசின் உளவுத்துறை எச்சரித்தது. எதிர்க்கட்சிகள் ஒன்று பாக்கியில்லாமல் எச்சரித்தன. எல்லாவற்றையும் உதாசீனப் படுத்தினார் கருணாநிதி. அதுமட்டுமல்ல, எச்சரிக்கைகளை மறுத்துரைத்து, இளக்காரம் செய்து, அவற்றுக்கு உள்நோக்கம் வேறு கற்பித்தார். அவதூறுகளைச் சுமத்தினார்.

ரா என்ற உளவுத்துறையானது தமக்கும் மத்திய அரசுக்கும் இடையில் பிளவு உண்டாக்கச் சதி பண்ணுகிறது என்றார். குமாரமங்கலத்தின் எச்சரிக்கையை அலட்சியப் படுத்தியது மட்டுமல்லாது, 'முன்னாள் மந்திரியின் ஜீப் கஞ்சா கடத்த உதவியது' என்று இல்லாத பழங்கதையைக் கிளறி அசிங்கப்படுத்தினார். பாரதீய ஜனதா செய்த ஆக்கபூர்வமான எச்சரிக்கையையும் எள்ளி நகையாடி, 'நிரூபிக்க முடியுமா? குறிப்பிட்டுச் சொல்ல முடியுமா? என்றெல்லாம் கேட்டு அவமதித்தார்.

போராளிகளுடன் பேச்சு வார்த்தை நடத்துகிறேன் என்று ஆரம்பித்து ஒவ்வொருவராகச் சந்தித்து என்ன சாதித்தார் முதல்வர்? விடுதலைப்புலிகள் வடக்கு — கிழக்கு மாகாணத்தில் தங்களை நிலைப்படுத்திக் கொள்ள மறைமுகமாக உதவினார், அவ்வளவே. இதர பல போராளிக் குழுவினர் — ஜனநாயகத்திலும் நம்பிக்கைக் கொண்டவர்கள் — இலங்கையை விட்டே வெளியேறி, வேறு பல நாடுகளில் தஞ்சம்புக நேர்ந்ததுதான் மிச்சம்.

தமிழகத்துக்குப் பல போராளிக் குழுவினர் வந்து சேர்ந்தனர். அவர்களில் ஒரு ஈ. பி. ஆர். எல். எஃப். பிரிவினர் கோடம்பாக்கத்தில் வசிக்கிறார்கள் என்று போலீஸுக்குத் தெரியாதா? தெரியாது என்றால் இவர்களது உளவுத்துறை உறங்குகிறது என்று தானே அர்த்தம்? தெரியும் என்றால் அவர்களுக்கு விடுதலைப் புலிகளால் எந்தக் கணமும் ஆபத்து நேரலாம் என்பதும் தெரிந்திருக்க வேண்டுமே? இதை எதிர்பார்த்து அவர்களுக்குப் போதிய போலீஸ் பாதுகாப்புத் தந்திருக்க வேண்டாமா?

போலீஸ் தன் கடமையில் தவறியது என்றால் அதற்கு அவர்கள் மட்டும் காரணமல்ல. போலீஸ் எப்போதுமே முதல்வரின் கருத்தறிந்து, அதற்கு அனுசரணையாகத்தான் செயல்படும். அது அதிகார வர்க்கத்தின் இயல்பு. எனவே விடுதலைப் புலிகள் விஷயத்தில் முதல்வரின் மெத்தனத்தைத்தான் போலீஸ் துறையும் பிரதிபலித்திருக்கிறது. முதல்வர் தீவிரம் காட்டியிருந்தால் போலீஸும் சுறுசுறுப்பாகச் செயல்பட்டிருக்கும். அமைதிப் படையை அவமதித்து விடுதலைப் புலிகளுக்கு வீர வணக்கம் செலுத்தும் முதல்வர் இருக்கும் போது, போலீஸும் அதற்கேற்பத்தானே நடந்து கொள்ள வேண்டும்?

இப்போது கூட தில்லியிலிருந்து வந்துள்ள அறிக்கையில் முதல்வர், விடுதலைப் புலிகளைக் கண்டித்திருக்கிறாரா, எச்சரித்திருக்கிறாரா, அவர்களுடைய வன்முறைப் போக்கும் தமிழீழக் கோரிக்கையும் தமக்கு உடன்பாடானவையல்ல என்று குறிப்பிட்டிருக்கிறாரா என்றால், இல்லை. பொதுவான அனுதாபம், பொதுப்படையான எச்சரிக்கை. இப்படி இவர் கண் துடைப்புச் செய்வதால்தான், இவர் தில்லியில் இருந்த போது இந்தப் படுகொலை நிகழ்ந்ததற்குக் கூட ஓர் உள்நோக்கம் கற்பித்து இன்று வதந்தி பரவுகிறது. 'இந்தப் படுகொலையைச் செய்த விடுதலைப் புலிகளுக்கும் கருணாநிதியின் வீர வணக்கம் உண்டா? ' என்று சிலர் கேட்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

இன்னும் சிலர் பேசுவது போல், திராவிடக் கழகத்தினருக்கு விடுதலைப் புலிகள் ஆயுதப் பயிற்சி அளித்து வருகின்றனரோ இல்லையோ, கருணாநிதி ஆட்சியில் மக்களின் உயிருக்கும் உடைமைக்கும் உத்தரவாதமில்லை என்ற பீதி பரவி வருவது முற்றிலும் உண்மை.

தேசிய முன்னணி அரசு, தி. மு. க. அங்கத்தினர் ஒருவர் கூட மக்களவையில் இல்லை என்பதை எண்ணிப் பார்க்கட்டும். கருணாநிதியை தில்லி எச்சரிப்பது என்ன, இவ்விஷயத்தில் கட்டளையே பிறப்பிக்கலாம்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

* உமார்த்தி, கோவை.

? திப்பு சுல்தான் தொடரில் தங்களைக் கவர்ந்த அம்சம்?

! அருமையான செட், மிதமான நடிப்பு.

* ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

? Drivers and Conductors are empowered to offload passengers found smoking என்ற வாசகம் அடங்கிய பேருந்தின் (அரசு) ஓட்டுனரும் நடத்துனரும் புகைபிடித்தால் பயணிகள் என்ன செய்வது?

! போக வேண்டிய இடத்துக்கு நேரத்தோடு பத்திரமாகப் போய்ச் சேர வேண்டுமானால் அதைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடுவது நல்லது. மனச்சாட்சி உறுத்துகிறது என்றால் ஊருக்குப் போய்ச் சேர்ந்த பிறகு உயர் அதிகாரிகளுக்கு ஒரு கடிதம் எழுதிப் போடலாம். அதன் பேரில் நடவடிக்கை எடுக்கப்படுகிறதோ இல்லையோ, கடமையாற்றிய திருப்தி உங்களுக்கு இருக்கும்.

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

? தேசிய முன்னணி அரசைக் கவிழ்க்கக் கூடிய சக்தி யாருக்கு இருக்கிறது?

! மக்களுக்கு மட்டுமே இருக்கிறது.



* நேர்மைக்குப் பாராட்டு

! அவர் மணி ரத்னமாக இருக்கலாம்; ஆனால் மனைவியும் ரத்னம்தான். அவர் ஆற்றலை நீங்களொன்றும் குறைத்து மதிப்பிட வேண்டாம்.

* ஜி. குசேலன், சங்கராபுரம்.

? இந்தியத் தகவல் தொடர்பு செயற்கைக் கோள் இன்சாட் — 1டி வெற்றிகரமாக விண்வெளியில் செலுத்தப்பட்டது பற்றி.

! செயற்கைக் கோள் இந்தியாவின் வெற்றி. விண்வெளியில் செலுத்தப்பட்டது அமெரிக்காவின் வெற்றி.

## பெண் அரசியல்வாதிகளில் உங்களைக் கவர்ந்தவர் யார்?

* ஜி. கதிரேசன், சிறுமுகை.

? கலைஞர் கருணாநிதியின் தமிழக அமைச்சரவையில் ஹிந்து பத்திரிகை இணை ஆசிரியர் என். ராம் இடம்பெற வாய்ப்பிருக்கிறதா?

! அவர் பார்வை இங்கு அல்ல; தில்லி பக்கம்தான் என்று கேள்வி!

* ஜெ. எம். முகமது ரஃபி, மானாமதுரை.

? பெண் தொடரில் அதிகமாக மணி ரத்னம் வாடை வீசுகிறதே?

* கதரைத் துறந்தார்!





* எம். செந்தில்வேலன், திருப்புறம்பியம்.

? கிராமப்புறங்களில் மருத்துவப் பணி புரிந்தால் கூடுதல் ஊதியமாமே?

! இதற்கெல்லாம் நம்ம டாக்டருங்க மசிய மாட்டாங்க. 'ஹவுஸ் சர்ஜன் ஒரு வருஷம் ஆன அப்புறம் கிராமப்புறப் பணி ரெண்டு வருஷம்; அதன் பிறகு நீ எங்க வேணா போய்ச் சம்பாதி' என்று கட்டாயமாச் சொல்லிட வேண்டியதுதான்.

* மேஜர் தாசன், ஈரோடு — 8.

? காங்கிரஸிலிருந்து விலகிய பிறகு கதர் வேஷ்டி சட்டை அணிவதை சிவாஜி விட்டு விட்டாராமே?

! காங்கிரஸ்காரர்களே கதர் அணிவதை விட்டாச்சு. சிவாஜியைப் பழிப்பானேன். கதர் என்பது இன்று ஒரு கட்சிச் சின்னமாக இருக்கத் தேவையில்லை. இனி அது சுதேசி இயக்கத்தின் சின்னமாகவும் இருக்க முடியாது. இந் நாட்டில் உள்ள கோடிக்கணக்கான ஏழை நெசவாளிகளிடம் நாம்

* தமிழக விஜயம்

* மனைவி ரத்னம்





* ஏன் இந்த வேலை?

## நீங்கள் கேட்டவை — தராசு

கொல்கின்ற அனுதாபத்தின் பிரதிபலிப்புத் தான் கதர். அந்தத் துணி அதிக காலம் உழைக்காது என்பதால் வசதி படைத்தவர்களே அதிகமாக வாங்கி, பயன்படுத்தி நூற்போருக்கும், நெய்வோருக்கும் உதவ வேண்டும்.

* ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

? நெடுமாறனுக்கு ஏனுங்க இந்த வேலை?

! விடுதலைப் புலிகளின் தனித் தமிழ் ஈழம் என்ற கோரிக்கை ஒரு போதையாகச் சிலர் தலைக்கு ஏறுகிறது. அந்தப் போதை புலிகளின் உண்மை கொடூரத்தைக் காண முடியாமல் அவர்கள் கண்களை மயக்கி விடுகிறது.

* ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.

? ராஜீவ் காந்தியின் தமிழக விஜயம் பற்றி...?

! பொட்டலச் சோறில் புளியஞ்சாதம் ஏ. ஒன்னாக இருந்ததாம்... ஏவ்!

* பி. ராஜசேகரன், மதுரை — 16.

? ஜெயலலிதா வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை என்று திருநாவுக்கரசு கூறியிருக்கிறாரே?

! இப்படியெல்லாம் வேண்டாத விஷயங்களைப் பேசப் போய்த்தான் அ. தி. மு. க. வின் அரசியல் உயர்நிலைக் குழுவில் முப்பத்தேழு பேரில் ஒருவராகக் கூட அவரால் இடம்பெற முடியவில்லை.

* எம். பிரபு, குமராட்சி.

? எஸ். எஸ். எல். சி. யில் செக்ஸ் கல்வி அறிமுகம் தேவைதானா?

! ஜெயகாந்தன் ஒரு முறை சொன்னார் செக்ஸ் எழுதுவது தவறில்லை; செக்ஸியாக எழுதுவதுதான் தவறு என்று. அதுதான் நினைவு வருகிறது. இன்று பத்திரிகைகள் பலவும் சினிமாவும் செய்து கொண்டிருக்கிற அருவருப்பான கைங்கர்யத்தைப் பள்ளிகளிலும் புகுத்தி விடாமல் கண்ணியமான முறையில் செக்ஸ் கல்வி போதிக்கப்படுமானால் அதனை வரவேற்கலாம். குடும்ப நலன், சுகாதாரம், உடல் ஆரோக்கியம் ஆகியவற்றுக்கு அக் கல்வி அவசியமே. ஆனால் முதலில் சிறந்த ஆசிரியர்களை இதற்கு உருவாக்க வேண்டும். இதில் அரசு போதிய கவனம் செலுத்தியிருப்பதாகத் தோன்றவில்லை.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம் *

? அரசாங்கம் — பத்திரிகைகள் உறவு எப்படி இருக்க வேண்டும்?

! தூஷணையாகவும் அவதூறாகவும் எழுதுகிறவர்கள் எழுதிக் கொண்டுதான் இருப்பார்கள். இவர்கள் வேறு; நல்லெண்ணத்துடன் விமர்சிக்கும் பத்திரிகைகள் வேறு என்று பகுத்தறிய அரசுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

* வண்ணை கணேசன், சென்னை.

? பெண் அரசியல்வாதிகளில் உங்களைக் கவர்ந்தவர் யார்?

! இன்றைக்கு ஜெயலலிதா. எம். ஜி. ஆர். செய்த தவறைத் தாமும் செய்யாமல் — உடல்நலம் குன்றியிருந்த போதிலும் 'நானே எல்லாவற்றையும் நிர்வகிப்பேன்' என்று பிடிவாதம் பிடிக்காமல் — அரசியல் உயர்மட்டக் குழு அமைத்திருக்கிறார். தம்முடைய பொதுச் செயலாளர் பொறுப்புக்களையும் இந்தக் குழு வசமே ஒப்படைத்திருக்கிறார். கட்சித் தேர்தல்கள் நடத்தி, உட்கட்சி ஜனநாயகத்தைப் பலப்படுத்துமாறு கோரியிருக்கிறார். உடல்நிலை தேறியதும் திரும்பி வந்து மக்கள் பணியாற்றவும் பொதுத் தேர்தலைச் சந்திக்கவும் உதவுவதாகக் கூறியிருக்கிறார். நேற்று வரை எப்படியோ, இன்று ஜெயலலிதாவின் நேர்மை பாராட்டுக்குரியது. அவரது தளபதிகள் அசட்டுத்தனமாகக் குடுமிபிடிச் சண்டையில் இறங்காமல் ஒற்றுமை காட்டி அவரது கோரிக்கைகளை நிறைவேற்றி வைத்தால், கட்சிக்கு மட்டுமின்றித் தமிழகத்துக்கே நற்பணியாற்றியவர்களாவார்கள். தொண்டர்கள் கொடி பிடித்து, 'புரட்சித் தலைவியை ஓய்வு பெற அனுமதிக்க மாட்டோம்' என்று கோஷம் எழுப்பி, அவரை நிர்ப்பந்திக்காமல் இருக்க வேண்டும்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

* எம். சம்பத்,
9, மாரியம்மன் கோயில் தெரு,
வேலாயுதம்பாளையம்,
639 117 — கரூர் வட்டம்.

# திசை மாறும் இலக்கியங்கள்

"என்னய்யா அறிவழகன்? பார்த்துட்டும் பார்க்காத மாதிரி போறீரு?'' என்றது குரல். நான் திடுக்கிட்டேன். சிறிது நேரம் நின்று உற்றுப் பார்த்த பிறகுதான் உருவத்தைப் புரிந்தது!

கவிஞர் ராக்கி.

பட்டு ஜிப்பாவும், தோளில் மடிப்பு கலையாத அங்கவஸ்திரமும்தான் அவரது டிரேட் மார்க். கையில் எப்போதும் வெற்றிலைச் செல்லமிருக்கும். அவரைக் காண்கிற போதுதான் நான் தாம்பூலம் தரிக்கிறதே வழக்கம். இலக்கியங்களைப் பற்றி நிறையப் பேசியிருக்கிறோம். அவரது வீட்டுக்குக் கூட நான் போனதுண்டு. வீடு கொள்ளாத புத்தகங்கள்! பிரம்மச்சாரி வாழ்க்கை. நிறைய படிப்பார். விமர்சிப்பார். கவிதைகள் எழுதுவார். படித்துக் காட்டினால் கேட்கக் கேட்கக் கானாம்ருதமாக இருக்கும்!

சிதம்பரம் பக்கத்திலிருந்து சினிமாவில் பாட்டெழுத வந்தவர்.

அதே ஊர்ப் பெயரால் அறியப்பட்ட இசைக் கலைஞருக்கு இனிய சிநேகிதர். அவரது இசையிலும், குரலிலும் சில பாடல்களைச் சினிமாவிலும் எழுதியிருக்கிறார் கவிஞர் ராக்கி.

இப்போது முற்றிலும் மாறியிருந்தார்.

ஐந்தாறு ஆண்டுகளுக்குள் இத்தனை மாற்றமா? பற்களில் துளிக்கூட வெற்றிலைக் காவியில்லை. ஜிப்பாவுக்குப் பதில் முழுக்கைச் சட்டை. சட்டையில் பெரிய பை. பைக்குள்ளே அதே சைஸில் பர்ஸ்!

''எங்கே கவிஞரே போயிட்டீங்க. இத்தனை நாளா?''

''இங்கேதானய்யா இருக்கேன். தொழில் மாறிப் போச்சு. அதனாலே ஆசாரப்பன் தெருவுக்கு மட்டும் வந்து போறது வழக்கம்.''

''வெத்தலை சீவலை விட்டுட்டீங்களா?''

''கவிதையையே விட்டுட்டேன்... இனி வெத்தலைச் சீவலை விடறதா பெரிய காரியம்? விட்டொழிச்சாச்சு எல்லாத்தையும்...'' சொல்லிவிட்டு ராக்கி ஒரு சுருட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டார்.

''கவிதை எழுதறதை விட்டுட்டீங்களா? ஆச்சரியமாயிருக்கே?'' என்றேன் நான். இவரோடு பழகிப் பழகி நானும் அல்லவா கவிதையைக் கற்றுக் கொண்டு... பரிசோதனையிலும் இறங்கியவன்! தேநீர்க் கடையை விற்று விட்டுத் தெருவெங்கும் கவி முழக்கம் செய்யப் புறப்பட்டவன்?

''அது வந்து... அறிவழகன்! பாட்டு சான்சுக்காக அலைஞ்சு அலைஞ்சு பணத்தை எல்லாம் இழந்துட்டு... கடைசியிலே சோத்துக்கே — துந்தனா அடிக்கிற மாதிரி ஆயிடுச்சு நிலைமை! அப்பதான் ஒரு யோசனை வந்தது...! பழைய புஸ்தகங்களை எடுத்துக் கொண்டு போய் எடைக்குப் போட்டு இட்லி சாப்பிடலாம்னு ஒரு சிநேகிதன் சொன்னான். அப்பப்பக் கொண்டு போய்ப் போட்டு ஒரு மூணு மாசம் வள்ளீஸாப் பொழுது போச்சு! ஒவ்வொரு நாளும் இப்படிக் கொண்டு போய் நான் போடறதைப் பார்த்த பழைய பேப்பர்க்காரன் சொன்னான்: ''எதுக்கு ஸார் இப்படி ஓல்ட் புக்ஸா வாங்கறீங்க? இதைவிட நியூஸ் பேப்பர் வாங்கிட்டு வந்தா உங்களுக்குப் பிரயோஜனம்... எனக்கும் பிரயோஜனம்.''

நான் திகைத்துப் போனேன். ''ஓ! நீங்க கொண்டு போன பழைய புத்தகங்களையெல்லாம் வெளியிலேருந்து எடைக்கு வாங்கிட்டு வர்றதா அந்தக் கடைக்காரன் நெனைச்சுட்டான் போலே?''

ராக்கி சிரித்தார்.

''அட, ஆமாய்யா. அதனாலேதான் ஓர் அட்வைஸ் கூடக் கொடுத்தான்! அதாவது வாங்கற பேப்பர் ஹிந்து, எக்ஸ்பிரஸ், தினமணின்னா ஒரு ரேட்டு, மத்த தினசரி எல்லாம் ஒரு ரேட்டுன்னு அப்பதான் எனக்குத் தெரிஞ்சது! அதனாலே அவன் சொன்னபடியே ஒரு சைக்கிள்லே தராசு படிக்கல்லைக் கட்டிக்கிட்டுப் பழைய பேப்பர் வாங்கப் போனேன். பாட்டெழுத அலைஞ்சதைவிட, இதிலே நல்ல பலன்!''

தூக்கிவாரிப் போட்டது எனக்கு!

''என்ன கவிஞரே சொல்றீங்க?''

''உண்மையை! வீடு வீடா தினமும் ஒவ்வொரு ஏரியாவுக்குப் போய்ப் பழைய பேப்பர்'னு கூவினாப் போதும்யா! அம்பது கிலோ நூறு கிலோன்னு அள்ளிக் கட்டிக் கொண்டாந்துடலாம். கிலோவுக்கு அம்பது காசு நின்னாலே போதும்'னு ஆரம்பிச்சேன். இப்போ தனியாவே பெரிய கடை போட்டாச்சு! ஸ்டாக் சேரச் சேர ஒரு நடை லாரியிலே ஏத்திக் கொண்டு வந்து இங்கே தள்ளிடலாம்! வம்பே இல்லே...'' சிரித்துக் கொண்டு சுருட்டை மறுபடியும் பற்ற வைத்துப் புகையை இழுத்தார் அவர்.

---

**இருகூரான்**

''இதென்ன கவிஞரே பழக்கம்? சுருட்டு! நாறலே?''

''நாறினா என்ன? பேப்பர்ல விசற மக்கு நாத்தத்துக்கு இப்படி ஒரு சுருட்டைப் புடிச் சாத்தான் சரிப்படுது! குத்தாலம் அருவியிலே குளிக்கப் போறப்ப இடுப்புக்குச் சாயத் துண்டு கட்டிக்கிற மாதிரிதான்...! எந்தத் தொழிலுக்குப் போறோமோ அதுக்கு ஏத்த வேஷம்!'' என்ற கவிஞர் என்னைப் பார்த்துக் கேட்டார்: ''நீங்க எங்கே இந்தப் பக்கம்?''

நான் சொல்லத் தயங்கினேன்.

தயக்கத்தை மறைப்பதற்காக இங்கித மாகச் சொன்னேன்: ''ஒரு நாளைக்குக் கவிஞரே நீங்க நம்ம வீட்டுக்கு வரணும்!''

''சும்மா வந்து பேசறதுக்கு இப்பெல்லாம் எனக்கு நேரமே இல்லே அறிவழகன். அந்தப் பக்கம் வந்தால் ஒரு நூறு கிலோ பழைய பேப்பர் கிடைக்குமா; சொல்லுங்க! வந்த மாதிரியுமாச்சு; வியாபாரத்தைப் பார்த்த மாதிரியும் ஆச்சு!''

''நீங்க வாங்க கவிஞரே! ஒரு வியாபாரத்துக்காகத்தான் உங்களை நான் கூப்பிடறேன்...'' என்றேன் நான் மென்று விழுங்கியபடி. இரண்டொரு நாட்களில் வருவதாக ஒப்புக் கொண்டார். விலாசத்தையும் வாங்கிக் கொண்டார்.

கவிஞர் என்னைப் பார்க்க வந்தபோது நான் தயாராகப் பண்டில்கள் பதினெட்டையும் எடுத்துத் திண்ணையில் வைத்திருந்தேன். பண்டிலுக்கு ஐம்பது – 'பழம் பெருமைகள்' இறுக்கிக் கட்டி க்ராப்ட் பேப்பர்



போட்டு ஒட்டப்படடிருந்தன.

''பழம் பெருமைகள் விலை போகலையா?'' என்றார் ராக்கி.

''நண்பர்களுக்கும் விமரிசனத்துக்கும் கொடுத்தது போக மிச்சம். ஆயிரத்து நூறு போட்டேன். அடக்கமே பன்னிரண்டாயிரம் ரூபாய். எப்படியும் அறுநூறு காப்பி லைப்ரரியிலே எடுப்பாங்கன்னு கடனை வாங்கிப் போட்டுட்டேன். புதுக்கவிதைகள் முன்னை மாதிரி ''மூவ்'' ஆகலையாம்!''

ராக்கியின் முகத்தில் ஒரு பச்சாத்தாபம் தோன்றியது. ''ஐயையோ!'' என்றார் அவர்.

அனுதாபப்படுவதாகத்தான் அர்த்தப்படுத்திக் கொண்டேன். ஆனால், அவர் அனுதாபம் அது அல்ல!

''நியூஸ் பேப்பருக்கு இருக்கிற 'குவிக் மூவ்' இதுமாதிரி பிரிண்டெட் புக்ஸுக்கு இல்லே அறிவழகன். அவல் பை செய்யக் கூட, இதனாலே அனுகூலம் இடையாது. கால் கிலோ — அரைக் கிலோ போடற மாதிரி பாலிதீன் பைகள் காகிதப் பைகளைவிட சீப்பா மார்க்கெட்டிலே கிடைக்குது! அதனாலே கிலோ ஒண்ணரை ரூபாய்க்குக் கூட இதை நான் விற்க முடியாது!''

வெகு 'ப்ராக்டிகலாக'ப் பேசினார் எனது கவிதை ஆசான்.

என் கண்களில் ரத்தம் வரவில்லை. அவ்வளவுதான் இருந்தாலும் அடக்கிக் கொண்டு சொன்னேன்: ''பழைய மாதிரி ஒரு மக்கடையே போட்டுடலாம்'னு இருக்கேன்...! ஏதாவது ஒரு விலை போட்டு எடுத்துக்குங்கோ கவிஞரே!''

## மணமகன் ஒரு மாணிக்கம்!

டெல்லியைச் சேர்ந்தவர் 19 வயது பபிதா. அவருடைய திருமணத்துக்கு முந்தைய தினம், இரவு படுத்துக் கொண்டிருந்த போது, தவறிப் பக்கத்திலிருந்த விளக்கு விழுந்ததால் பபிதாவின் உடல் தீப்பற்றிக் கொண்டது. பலமான தீக்காயங்களுடன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்.

இந்தச் சூழ்நிலையில், மணமகன் வீட்டார் என்ன செய்வார்கள்? திருமணத்தை ஒத்தி வைப்பார்கள். சிலர், திருமணத்தையே நிறுத்தி விடவும் செய்வார்கள். ஆனால் மணமகன் நரேஷ்குமார் என்ன செய்தார் தெரியுமா? நேரே ஆஸ்பத்திரிக்குப் போய் பபிதாவைச் சந்தித்து ஆறுதல் கூறிவிட்டு ஆஸ்பத்திரி நிர்வாகிகளிடம், மத சம்பிரதாயப்படி, பபிதாவை ஆஸ்பத்திரியிலேயே திருமணம் செய்து கொள்ள அனுமதி கேட்டார். அவர்களும் சம்மதித்தனர். ஆஸ்பத்திரி வார்டிலேயே பபிதா — நரேஷ் திருமணம் நடந்து முடிந்தது!

நன்றி: உமன்ஸ் எரா.

தகவல்: ஜூலி.

டிங் — டாங் டில்லி:

## ராஜீவ்: 'பந்தா' மாறவில்லை!

●● இப்போதும் கூட ராஜீவ் காந்தியைப் பல இ. காங்கிரஸ் எம். பி.க்கள் எளிதில் சந்திக்க முடிவதில்லை. பழைய 'ஆமாம் சாமிகள்' இன்னும் அவரிடம் செல்வாக் கோடு இருப்பதே காரணம். சமீபத்தில் முக்கியமான மார்க்சிஸ்ட் கட்சி எம். பி. ஒருவருக்கு ராஜீவ் அப்பாயிண்ட்மெண்ட் கொடுத்திருந்தார். அவர் ஜன்பத்தில், ராஜீவைச் சந்திக்கச் சென்ற போது, ஆனந்த்



சர்மா அனுமதி மறுத்து விட்டார்! பிறகு அவர் வரக் காணவில்லையே என்று ராஜீவ் விசாரித்த போதுதான், அவர் வந்து விட்டுத் திரும்பிப் போனார் என்று தெரிந்தது. உடனே வி. ஜார்ஜிடம் சொல்லி, அந்த மார்க்சிஸ்ட் எம். பி. யிடம் மன்னிப்புத் தெரிவிக்கச் சொன்னார் ராஜீவ்!

ராஜீவ்

●● வாணிபம், ஜவுளி, எஃகு — சுரங்கம், தொழில் துறை என்று எல்லா அமைச்சகங் களின் அலுவலகங்களும் உத்யோக் பவனில் இருக்கின்றன. வெளிநாட்டவர் வேறு நிறையப் பேர் இங்கு வருகிறார்கள். இங்கே உள்ள டாய்லெட்டுகளில் எல்லாம் எவர் சில்வர் குழாய்கள் பொருத்தி நவீனமயமாக் இச் சில மாதங்கள் கூட ஆகவில்லை. இப் போது ஒரு எவர் சில்வர் குழாயைக் கூட காணோம்! பழைய பிளாஸ்டிக் குழாய்களே அழுது வடிந்து கொண்டிருக்கின்றன!

தொகுப்பு: சித்தார்த்

# பெரிய இடத்து பிள்ளை

அர்ஜுன் அடிதடியில் மட்டுமல்ல, காதல் சேட்டைகளிலும் ஆக்ஷன் கிங்காகக் காட்டிக்கொள்ள முயன்றிருக்கிறார். கனகா அர்ஜுன் கும்மாளம் படா டப்பாங்குத்து ஸ்டைல்தான்! கனகாவுடன் எத்தனைக் கெத்தனை ஒட்டி உரசல் காட்டிக் கிளுகிளு ஏற்றியிருக்கிறாரோ, அத்தனைக்கத்தனை தீபிகாவிடம் விட்டு விலகி மனசைத் தொட்டிருக்கிறார்.

கனகாவின் கடலளவு கண்கள் வாயைக் காட்டிலும் அதிகம் பேசுகின்றன. அர்ஜுன் உயிரை விட்டுப் போராடி அந்த டவுன் பஸ் பிக்பாக்கெட் கும்பலிடமிருந்து அவரது கழுத்துச் சங்கிலியைப் பறித்துக் கொடுக்க, அதற்காகத் தோழிகள் அவரைப் பாராட்டிப் பேச, 'ஹூம்... இதெல்லாம் ஒரு செட்டப். ஒரு கிழவி செயின் போயிருந்தா இப்படிச் செய்திருப்பாரா?' என்று விழி செருகக் கேலி பேசுவதாகட்டும்; உண்மையில் அவர் பேட்டை ரௌடிகளிடம் மாட்டிக்கொண்டு, 'ஐயோ, யாராவது காப்பாத்துங்களேன்,' என்று அலறும் போது அர்ஜுன் புகுந்து விளையாடி, அசந்த நேரத்தில் அடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடக்கும் போது பதவிசாய் எதிர்நின்று பாவ மன்னிப்புக் கோரும் பரிதவிப்பிலாகட்டும்; பெரிய இடத்துப் பிள்ளையாயிருந்தவர் கூலித் தொழிலாளியாகிக் குடும்பம் நடத்தும் போது அவரைச் சந்திக்க, 'என்னைப் பார்க்க உனக்கு என்ன தகுதி இருக்கு?' என்று அர்ஜுன் வெடிக்க, 'நான் நினைச்சவரைக் கல்யாணம் பண்ணிக்க முடியாதததனால இதுவரை கல்யாணமே பண்ணிக்காம இருக்கேனே, அந்தத் தகுதிதான்,' என்று மென்று விழுங்கிப் பேசும் அந்த ஆழத்திலும் சரி — புலிக்குப் பிறந்தது புலிதான் என்று காட்டியிருக்கிறது அந்தத் தேவிகா வாரிசு.

முதலிரவுக் கட்டிலில் காத்திருந்து, தீபிகா வந்ததும் அவர் பக்கம் அர்ஜுன் கை நீட்டியதும் சடக்கென்று விலகி, குபுக்கென்று கண்ணீர் கொட்டி அவர் தம் சோகக் கதையைச் சொன்னதும் இந்த முகத்தில் ஒரு கலகலப்பைப் பார்க்கப் போவதில்லை என்பது அத்துபடி ஆகிவிடுகிறது. இருந்தாலும் மாடியில் துணி உலர்த்திக் கொண்டிருந்த போது ஆட்டோ சப்தம் கேட்டு எட்டிப் பார்த்து அப்பா பூர்ணம் வருவதை அறிந்து கொண்டு முகத்தில் கலவரம் படிய இறங்கி ஓடி வந்தவர், கணவரிடம் என்ன சொன்னாரோ ஏதோ, இருவரும் வீட்டுக்குள் அன்னியோன்னியத் தாம்பத்தியம் காட்ட ஓடிப்பிடித்து விளையாடும்பூரித்த மகிழ்ச்சி— அது செயற்கைதான் என்றாலும் — எத்தனை இதம்! தந்தை பூர்ணம் அதைக் கண்ட நிறைவில் சிரித்துச் சிரித்தே இறுதி மூச்சு விட்டது அறிந்து அவர் எழுப்பும் அழுகுரல் நெஞ்சைப் பிழிகிறது.



கொஞ்சம்தான் என்றாலும் பூர்ணம் பூர்ணமாகவே இருக்கிறார். மனிதர் திருட்டுத் தம் அடிக்க என்ன தவிதவிக்கிறார்! பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்த பிறகு கட்டுப்பாடின்றி அவர் புகைப்பதைக் கண்டு டாக்டர் கண்டிக்க, 'இதுவரைக்கும் நான் ஏன் சிகரெட் பிடிக்காமல் இருந்தேன் தெரியுமா? என் பெண்ணுக்குக் கல்யாணம் முடியற வரைக்கும் நான் உயிரோட இருக்கணுமேன்னுதான்;' என்ற சாதா வசனத்தையே ஸ்பெஷல் தத்துவம் போல் பதிய வைக்க பூர்ணத்தால்தான் முடியும்.

கதைக்கு உயிரோட்டக் கலகலப்பு கவுண்டமணி — செந்தில் ஜோடிதான். கவுண்டமணி தன் டீ கடையில் ஆற்றியபடி, 'அண்ணே, வந்து ஒரு டீ சாப்டுட்டுப் போங்கண்ணே,' என்று தெருவோடு போகிறவர்களைப் பாசமாய் அழைக்க, ஒவ்வொருத்தரும் துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று அம்பேலாவது ஏன்? கைவசம் பல சினிமாக் கதைகள் வைத்துக் கொண்டு அகப்பட்டவர்களிடம் அறுத்தால் எவன் நிற்பான்? வஞ்சனையின்றிக் கிச்சுக் கிச்சு மூட்டியிருக்கிறார்கள்.

எம்.ஜி.ஆரிடம் விசுவாசம் காட்டியிருப்பது பிசகில்லை. அதற்காக வேடிக்கை வில்லுப்பாட்டில் எம்.ஜி.ஆர். பாடல்களைச் செருகி அவரது அந்தி ஊர்வலம் வரை காட்டியிருப்பது இடறுகிறது.

ரசிப்பதற்கு நிறைய இருந்தாலும் பளிச்சென்று தெரியும் செயற்கைத் தனங்களும் ஓவர் சென்டிமென்ட்டும் சேர்ந்து எதையோ வீணாக்கி விட்டதைப் போன்ற விரக்தி ஏற்படுத்துகிறது.

— பி. எஸ். எஸ்.

# மணல்வெளி மான்கள்

## வையவன்

## 25

கும்மென்று பலாச்சுளை வாசனை. பின்னால் கடகடத்துக் கொண்டு வரும் மாட்டு வண்டியிலிருந்து வந்திருக்க வேண்டும்.

கௌதம் தாம்போகிப் பாலத்தின் மீது நடந்து கொண்டிருந்தான். ஓய்விருக்கிற ஒவ்வொரு மாலையிலும் அவனுக்கு ஆற்றுக்குப் போக வேண்டும்.

கௌதம் இன்ஸ்பெக்டரை நினைத்தான். நேற்று வேலூரில் அவரிடம் சற்றுக் கரடு முரடாக நடந்து கொண்டோம் என்று தோன்றியது. ஆனால் வேண்டுமென்றே இல்லை.

அவர் கொடுத்த பிலோமினாவின் அழைப்பிதழ் இன்னும் பாக்கெட்டில் இருந்தது. அதை ஒருமுறை தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

இந்த அழைப்பிதழை எனக்குக் கொடுக்க வேண்டுமென்று அவளுக்கு ஏன் தோன்றியது? அவளை நான் புரிந்து கொண்டேன் என்று அவள் உணர்த்த வெளியீடா? சிஸ்டர் பிலோமினாவின் வாழ்க்கை பொருள் நிறைந்ததாக மாறியிருப்பதை எனக்கு உணர்த்த விரும்புகிறாளா? இல்லை... தெரிந்தவன் ஒருவனுக்குத்தான் பணியாற்றும் பள்ளி ஆண்டு விழாவை அறிவிக்கிற சாதாரண அழைப்பிதழா?

அவனுக்கு மீண்டும் இருதயராஜ் நினைவு வந்தது. அவளிடமிருந்து ஒரு பொருளை அவர் கொண்டு வந்து கொடுப்பது இரண்டாவது முறை. முதலில் கடிகாரம்.

அவர் ஏன் எந்தக் கல்மிஷமுமின்றி இப்படி இதை வாங்கிக் கொண்டு வந்து கொடுக்கிறார்? ஒரு சலனமுமின்றி... ஒரு தயக்கமுமின்றி. இந்த உறவின் பரிசுத்தம் அவரை இவ்வளவு கவர்ந்திருக்கிறதா?

இப்போது கும்மென்று மல்லிகை மணம் பின்னாலிருந்து வீசிய காற்றில் மிதந்து வந்தது. இதுவும் வண்டியிலிருந்துதான்.

பலாச்சுளையும், மல்லிகையும். இரண்டும் நித்யாவுக்குப் பிடிக்கும். மிக மிக. இரண்டில் எதைப் பார்த்தாலும் நித்யாவை நினைத்துக் கொள்வான்.

மனம் விநோதமானது. ஓர் அபூர்வ கம்ப்யூட்டர். ஏதோ ஒரு பொறி தட்டினால் சட்டென்று நினைவுக் கிடங்குக்குத் தாவி விடுகிறது.

ஒருமுறை அவன் இரண்டையும் வாங்கி வந்தான். இரண்டு முழம். பத்துப் பதினைந்து சுளை. நிலா வர நேரமிருக்கும் நட்சத்திரம் பூத்த ஆற்றங்கரை இருட்டு. பல நாள் முன்பு.

"என்னது?" என்றாள். மூக்குத்தி மட்டும் மின்னும் அரையிருள்.

"பாரேன்."

நெஞ்சு நிறைய மணத்தை முகரும் உட்சுவாச ஒலி.

"இது?"

அவன் ஒரு பலாச்சுளையால் அவள் உதட்டைத் தொட்டான். அவள் கை தள்ளினாள்.

"இதெல்லாம் என்ன கௌதம்?"

"ஒனக்குப் பிடிக்கும்தானே."

"உன்னை விட ஒண்ணுமில்லே."

இரண்டையும் அவன் பக்கம் ஒதுக்கினாள்.

"புரியலே?"

"என்னது?"

"எனக்குப் பிடிக்கும்னு இதெல்லாம் ஏன் வாங்கறே நீ?"

"............"

"என்னைத் திருப்தி பண்ணணும்னு நெனைக்கிறியா?"

அவன் அப்படி நினைக்கவில்லை.

"இதுக்கெல்லாம் நான் மயங்கிடுவேன்னு நெனச்சியா?"

"நீ வம்புக்கு வர்றே."

"இதுக்கு ஏங்கறேன்; இதெல்லாம் கெடைச்சா நான் உங்கிட்டே ஏமாந்துடுவேன்னு பார்க்கறே?"

"நெஜம்மா இது வீண் வம்பு."

அவள் மல்லிகைச் சரத்தை எடுத்துக் கௌதம் மார்பின் மீது செல்லமாக அடித்தாள்.

"பெண் பலவீனமானவதான் கௌதம்! ஆனா எல்லாப் பெண்ணும் இல்லே."

"இனிமே வாங்கிட்டு வர்றதில்லே."

"ஐய்யய்ய... நான் எதையோ சொல்றேன். நீ என்னமோ நெனைக்கிறியே."

அவன் பொறுத்திருந்தான்.

"எனக்கு நீ மட்டும் போதும் கௌதம். பூ, பழம், பொன், புடைவை, பொழுது போக்கு இதெல்லாம் இப்பத் தேவையில்லே."

உணர்ச்சிவசப்பட்டிருக்கிறாள். அதைக் கௌதம் சொல்லி விட்டான்.

"எப்பவும் தேவையில்லேன்னு சொல்லலியே. அப்படிச் சொன்னாதான் உணர்ச்சிவசம்."

"இது என்ன?"

"நீ முக்கியம். எனக்கு எது ரொம்ப ரொம்பப் பிடிக்கும்? நீ... நீ... நீ... ஒனக்கும் எனக்கும் மத்தியிலே இதெல்லாம் பாலமுமில்லே.



பாதையுமில்லே. அலையற அளவுக்குப் பலவீனங்களுமில்லே.''

அன்று ஆற்றோரமிருந்த ஒரு முகம் மழுங்கிய சிலைக்கு அவர்கள் இருவரும் அந்த மல்லிகைச் சரத்தை மாலை சாத்தினார்கள். ஒரு பலாச் சுளையை மட்டும் இருவரும் பகிர்ந்து கொண்டார்கள். மீதத்தைத் தெருவில் பலீஞ் சடுகுடு ஆடிய சிறுவர்கள் ஆளுக்கொன்றாய்ப் பெற்றனர்.

இப்போது கௌதமுக்குப் பலாச் சுளையும் மல்லிகையும் மிக மிகப் பிடிக்க ஆரம்பித்தன. எங்கே அந்த வாசனைகள் வந்தாலும் மூக்கு மோப்பமிட்டுவிடுமளவு.

''யோவ் மருகப்புள்ளே ரோட் ஒன்னுது தான்னு நெனப்பா?''

பின்னால் வந்த வண்டிக்காரன் குரல் கொடுத்தான். சிங்காரம்.

கௌதம் வழி ஒதுங்கினான்.

நெல் மூட்டை ஏற்றிய வண்டி. பாரம் மாடு விட்ட பெருமூச்சில் புரிந்தது. உருண்டு வந்த சக்கரம் அவனருகில் நின்றது.

''எங்கே காத்து வாங்கினு போறே?''

''அதான் நீயே சொல்லிட்டியே மாமனாரே, நீ எங்கே போய்ட்டிருக்கே?''

பலாச்சுளையும் மல்லிகையும் நெருக்கமாக மணந்தன.

''பூந்துறைக்கு நெல்லு மூட்டை போவுது.''

''கூடவே பலாச்சுளை, மல்லிப் பூ.''

''அதெல்லாம் கண்டுக்காதே! நீ வழித் துணைக்கு வரணும்.''

கௌதமுக்குச் சொரேலென்று கோபம்' வந்தது.

''யோவ் சிங்காரம், என்ன விளையாடறியா?''

அவன் தப்பாகப் புரிந்து கொண்டதை அவசரமாக உணர்ந்தான் சிங்காரம்.

''அடடே கோச்சுக்கிறியே மாப்பிள்ளே! ஒன்னை எதுக்குக் கூப்பிடணும், எதுக்குக் கூப்பிடக் கூடாதுன்னு எனக்குத் தெரியாதா?''

''ம்ம்... சரி சொல்லு.''

''பூந்துறையிலே கட்டின சீட்டுப் பணம் பன்னெண்டாயிரம் இன்னிக்குக் கெடைக்கும். தோதா தொணைக்கு வர ஆள் இல்லே. நீ வருவியான்னு கேக்க வீட்டாண்ட போனேன். சவுந்தரம்மா நீ இப்பதான் ஆத்துக்கா போனேன்னு தகவல் சொல்லுச்சு.''

''எத்தனை மணிக்குத் திரும்புவே?''

''ரெண்டு அவரு. போனதும் மூட்டையை எறக்கிட்டு, பணத்தை வாங்கினு திரும்ப வேண்டியதுதான். தொகை பெரிசு. இல்லேன்னா ஒனக்குத் தொந்தரவு தர மாட்டேன்.''

கௌதம் யோசித்தான்.

''வழி இருட்டு. சீட்டு எடுத்தது பத்து



ஒருவர்: உங்க மானேஜர், இளைச்ச ராமசாமியை ஒரு வாரம் சஸ்பெண்ட் பண்ணிட்டாராமே, ஏன்?

பேருக்குத் தெரியும்.''

''......''

''பூவும் பழமும் வாங்கினு இவன் எங்கியாவது நவுந்துருவான்னு பார்க்கிறியா.. பிராமிஸா ஒண்ணும் இல்லே. வுட்டேன்னு.''

''நான் உன் கூட வர மாட்டேன். ஸ்டேஷன்லே குந்திட்டிருப்பேன்.''

''நீ அங்கியேதான் இரு. சேட்டு வுட்ட விடு பக்கம்தான். நெல்லு எறக்கறது தான் தாமசம். பட்டுனு வந்துடுவேன்.''

கௌதம் வண்டிச் சக்கரத்தின் மீது ஒரு கால் வைத்து ஏறினான்.

''ஹை... ஹை...''

வண்டிச் சக்கரம் உருண்டது.

''என்னா மருகப்புள்ளே.. இன்னான்னமோ நடந்துடுச்சு?''

''ஆமா.. நடக்க வேண்டியது நடந்து தானே தீரும்.''

''நீயும் 'தில்' வான ஆளுதான்!''

கௌதம் மௌனமாயிருந்தான்.

''பெரிய கைவி நித்யாவுக்கு வேணும்னே வேற மாப்பிள்ளை செலக்ட் பண்ற அளவு போயிட்டாப்பல இருக்கு.''

''ம்ம்ம்.''

''நித்யா தேங்கா ஒடைச்சாப்பல ஒன்னைத் தவிர வேற யாரையும் கட்டிக்க முடியாதுன்னு சொல்லிடுச்சாமே?''

''உஹ்ஹும்?''

''ஒனக்குத் தெரியாது?''

''ஹஹும்.''

''இதான் வாணான்றது! நான் இன்னா உனக்கு எதிர் பார்ட்டியா?''

''நிஜமா தெரியாது சிங்காரம்.''

''சன்னிதித் தெரு பூரா ஒரே குபாரா இது.''

''என்னன்னு?''

''நீ அதை இட்டுனு ஓடிடப் போறேன்னு... ஆஸ்பத்திரிக்கு அது உன்னை வந்து பார்த்த அன்னியிலேர்ந்து ரெண்டு ஆளு மாத்தி மாத்திக் காவல்தான். தெரியாதா சங்கதி?''

''நிஜம்மாத் தெரியாது.''

''ஹை... இந்தக் கதைதான் நம்மகிட்டே வுடக் கூடாது.''

''சிங்காரம்'' என்று மாறிய குரலில் கனமான தொனியில் கூப்பிட்டான் கௌதம்.

''ரைட் ரைட். புரிஞ்சுட்டேன். நம்பறேன். அவனுங்க காவல் நிக்கிறானுங்க. அதான் நியூஸ். சொல்லிட்டேன். பொண்ணு மனசு வெச்சிட்டான்னா இவனுங்க காவலாவது கத்திரிக்காயாவது... நீ உம்முனு ஒரு வார்த்தை சொல்லு மருகப்புள்ளே. இன்னிக்கு ராவு நித்யாவைக் கூட்டிக்கினு வந்து நான் ஒங்க ரெண்டு பேரையும் ரயில் ஏத்தறேன்.''

சிங்காரம் நல்லவன்தான். ஆனால் ஒரு பாரதி வரி மனசில் சீறிக் கொண்டு வந்ததைத் தவிர்க்க முடியவில்லை. 'சிங்கம் நாய் தரக் கொள்ளுமோ நல்லரசாட்சியை!'

''வேணாம் சிங்காரம்.''

''என்னா சொல்றே நீ?'' அவன் வண்டியை நிறுத்தி விட்டான்.

''வண்டியை ஓட்டு. சொல்றேன்.''

சக்கரம் உருண்டது.

''கெணத்துத்தண்ணியை ஆத்து வெள்ளம் அடிச்சுட்டுப் போக முடியாது.''

''துளசிங்கம் சங்கதி ஒனக்குத் தெரியாது. அவன் பைப் போட்டு எரைச்சு ஆத்து வெள்ளத்துலே கலந்துடுவான்.''

அது முடியாது. நித்யாவுக்கு அது தெரியும். தனக்கும். சிங்காரத்திற்கு நம்பிக்கையில்லை. அவனுக்குப் பலவீனங்களில் தான் அதிக நம்பிக்கை. இது ஓடும் வண்டியில், அவன் மாதிரி ஒருவனிடம் விவாதிக்கும் விஷயமில்லை.

''அந்தப் பேச்சை விட்டுடு சிங்காரம்.''

வழி மாள்வதற்குச் சிங்காரத்திற்கு ஊர் வம்பு தேவைப்பட்டது.

''துளசிங்கத்தோட போச்சே அந்தப் பொம்பள.... அதாம்பா மாசிலா பொண்டாட்டி ரஞ்சிதம். அவனுக்கும் அதுக்கும் சரிப்பட்டு வர்லியாமே.''

''அப்பிடியா?''

''மெட்ராஸ்லேருந்து எவனோ ஒரு எக்ஸ்ட்ராவை இட்டாந்து இவ வூட்டில தங்க வைக்க முயற்சி பண்ணானாம். இவ அவனைக் கழுத்தைப் புடிச்சுத் தள்ளிக் கைகலப்பாயிடுச்சாம். அவன் ஓடியாந்து அந்த எக்ஸ்ட்ரா எதிர்லியே இவள பெல்ட் டைக் கழட்டிக்கிட்டு வாங்கு வாங்குன்னு வாங்கினானாம். இவ கதவைத் தாப்பாள் போட்டுக்கிட்டு ஒரு நாள் பூரா தொறக்கலியாம்.''

கௌதம் பதறாமல் கேட்டுக் கொண்டான். இப்படி ஒன்று நடக்கும். எதிர்பார்த்ததுதான். ஆனால் இவ்வளவு சீக்கிரமா?

''அப்புறம்?'' கௌதம் ஆர்வம் காட்டாமல் கேட்டான். இன்னும் கூட ரஞ்சிதம் மீது அவனுக்கு வெறுப்பு வரவில்லை. ஒரு வாழ்வு சீரழிவதைக் கண்ட பரிதாபம் எழுந்தது.

''அப்பறமா இன்னா.... காத்தால கதவை நெம்பித் தூக்கித் தொறந்துருக்காங்க. ஏடாகூடமா ஒண்ணும் ஆவலே.''

துளசிங்கம் பயந்து விட்டிருப்பான். வழக்கமாக இது அவன் போக்கல்ல. அவன் போக்கு மிதமிஞ்சுவதானாலும் படிப்படியாய் மலைப் பாம்பு வளைப்பது போல் அடியடியாய்த்தான் நகரும். இப்போது பதறியிருக்கிறான். விழுது விட்டு விழுது பற்றுவது போல் பெண் துணைக்குப் பதறுகிறான்.

பூந்துறை ஒரு சின்ன ஸ்டேஷன். ஒரே பிளாட் பாரம். எதிர் லைனில் ரயில் நின்றால் ரயில் போகும் வரை காத்திருந்து லைன் தாண்டி வர வேண்டும். ஒரு வருஷமாகப் பேச்சு அடிபடுகிறது. இன்னொரு பிளாட் பாரம் கட்டப் போவதாக.

சின்ன ஸ்டேஷன்களில் உள்ள சிமெண்ட் பெஞ்சு. சரக்கொன்றை மரங்கள். ஸ்டேஷன் விளக்கு தாண்டி, தூரத்தில் தெரியும் கேபின் வெளிச்சம். நிலா இருந்து விட்டால் வானம் காட்டும் ஒரு தூரப் பிரதேச ஒய்யாரம்... அமைதி... இடையிடையே சில் வண்டு சங்கீதம்... பூந்துறையிலும் இருந்தது.

சிமெண்ட் பெஞ்சில் தனியாக நினைவுகளில் மூழ்கினான். சிங்காரம் இரண்டு கல் எறிந்திருந்தான். ஒன்று நித்யா. மற்றொன்று ரஞ்சிதம்.

ஊரில் என்னென்னவோ நடந்து கொண்டிருக்கிறது. தனக்குத்தான் தெரியவில்லை. ஒரு பிரச்னையைச் சுற்றிச் சுற்றி ஓடிக் கொண்டிருப்பதால் எதுவும் தன் காதில் விழ வாய்ப்பில்லை.

காவல் கெடுபிடி அதிகமானால் நித்யா மனமுடைந்து விடுவாளோ... சீ..... என்ன நினைப்பு இது? அவள் கோழைப் பெண்ணல்ல. தனக்காகப் பயப்படமாட்டாள். எனக்கு என்னவாவது நேர்ந்து விடுமோ என்றுதான் கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள்.

ஆக காவல் போட்டிருப்பவர்களுக்கு மூளை இல்லை என்று தோன்றியது. ஊருக்கெல்லாம் தெரியும்படி இவர்களே எனக்குப் பேர் குறித்து விட்டார்கள்!

ஓர் ஆணுக்கும் பெண்ணுக்குமான உறவும் திருமணமும் இப்படியா விளம்பரமாக வேண்டும்! மனசில் எங்கோ கரித்தது. நினைத்தால் எல்லாம் இப்படியேதான் முடிகிறது.

சரக் சரக்கென்று ஒரு பூட்ஸ் ஓசை தன்னை நெருங்கி வருவதைக் கவனித்தான் கௌதம்.

"யாரது உட்கார்ந்திருக்கிறது?"

இன்ஸ்பெக்டர் இருதயராஜ் குரல்.

"நான் தான் சார்."

"நான் தான்னா?"

"கௌதம்."

"கௌதமா... என்ன இங்கே இருட்டிலே?"

"ஒண்ணுமில்லே வண்டிக்கார சிங்காரம் சீட்டுப் பணம் கொண்டு வர வழியிலே கண்டடிக்குக் கூட்டிட்டு வந்தாரு."

"அந்த ஆள் எங்கே?"

"பணம் வாங்கிட்டு வரப் போயிருக்காரு...."

அவன் எழுந்திருக்க முயன்றான்.

"உட்காரு.. உட்காரு. நானும் ஒரு கேஸ் விஷயமா வந்திருக்கேன். கான்ஸ்டபிளுங்க ரோட்டிலே நிக்கறாங்க."

சந்தனக்கட்டை லோடு ஏற்றிய லாரிகள் அங்கே ஓரிரு முறை பிடிபட்டிருக்கின்றன. எனவே என்ன கேஸ் என்று அவன் கேட்கவில்லை.

இன்ஸ்பெக்டர் சிமெண்ட் பெஞ்சின் மீது ஒரு முறை கர்ச்சீப்பைத் தட்டி விட்டு உட்கார்ந்தார்.

"நாம ரெண்டு பேரும் அடிக்கடி சந்திக்கிறோம். இல்லே கௌதம்?"

"ஆமா சார் எதிர்பாராம..." வேறு ஏதோ சொல்ல வந்து அவன் பேச்சை நிறுத்தினான்.

"என்னமோ பாக்கிவிட்டுட்டே..."

அவன் மௌனமானான்.

"சொல்லத் தேவை இல்லேன்னா விட்டுடு."

"எதிரெதிர்க் கோணங்களிலே சந்திக்கிறோம்."

"புரியல்லே...."

"நீங்க கேஸ் பிடிக்க வந்திருக்கீங்க. நான் துணைக்கு வந்திருக்கேன் — இப்ப. நேத்து நான் ஆதி பெய்லுக்கு முயற்சி பண்ணேன். நீங்க விடக் கூடாதுன்னு வலியுறுத்த வந்தீங்க."

அவர் லேசாகச் சிரித்தார்.

"யூ ஆர் கரெக்ட்... இப்பக் கூட உம்மேல ஒரு கம்ப்ளெயிண்ட் வந்தது. அது நிஜம் மான்னு விசாரிக்கத்தான் உட்கார்ந்தேன்."

"என்ன கம்ப்ளெயிண்ட் சார்?"

"நித்யான்னு ஒரு பொண்ணை நீ கடத்திட்டுப் போக முயற்சி பண்றதா!"

(தொடரும்)

நண்பர்: 'புது மானேஜர் ரொம்ப நேர்மையானவர்; லஞ்சமே வாங்க மாட்டார்'னு பொய்ப் பிரசாரம் பண்ணி அவருக்கு லஞ்சம் சேர விடாமல் தடுத்துட்டானாம்!

— எஸ். முகம்மது ஆசுப்.



மத்யமர் :



**ப**தினெட்டு வருஷ மண வாழ்வில் ஒரு முறை கூட மோகனரங்கம் மனைவிக்குத் துரோகம் பண்ணியதில்லை. இப்போது மட்டும் என்ன, வெறும் காகித துரோகம் தானே?

அன்புள்ள நரேஷ்,

(நரேஷ் என்றுதான் பெயர் கொடுத்திருக்கிறான்.)

கடிதங்களைத் துறந்துவிட்டு நாம் சந்திக்க வேண்டிய வேளை நெருக்கம் வந்துவிட்டது. சந்திப்பதால் நாம் இருவரும் சமூகம் நியமித்த லட்சுமண ரேகைகளைத் தாண்டுகிறோம். கொஞ்சமேனும் நம் மறு பாதிகளுக்கும் நம்மை அறிமுகம் செய்து வைத்தவர்களுக்கும் துரோகம் செய்கிறோம் என்பதை அறிந்தும் நான் முடிவெடுத்து விட்டேன். காரணம், என் வாழ்க்கையில் உள்ள வெறுமை. புதன் மாலை 21 — ஆம் தேதி, செங்கல்வராயன் பூங்காவில் நான் உங்களுக்குப் பிடித்த நீலப்புடவை அணிந்து வருகிறேன். கையில் ரோஜாப்பூ வைத்திருப்பேன். நீங்களும் நீலச் சட்டை ரோஜாவுடன் வாருங்கள், ஆறு முப்பதுக்கு!

வினு.

விநு என்ற பெயரே அவனைக் கிரங்க அடித்தது. மேலும் கடிதத்தில் பொதிந்திருந்த லேசான சதி, மனைவி பத்மாவுக்குச் செய்யப் போகும் துரோகச் செயலின் அனாசாரம், அனைத்தாலும் அவன் நரம்பு முறிக்கை அதிகரித்திருந்தது.

முடி திருத்தகத்தில் நாவிதர் விரல்களால் அவன் தலைமுடியைப் பிடித்துச் சாயம் ஏற்ற, இளமை தயக்கத்துடன் திரும்பிய போது யோசித்தான். ஜாக்கிரதை! பத்மாவுக்குத் தெரியக் கூடாது! எவ்விதமான உற்சாகமும் காட்டாதே. எப்போதும் போல இரு. உன் மனைவிக்கு உன் அத்தனை மௌன விசித்திரங்களும் தெரியும். பதினெட்டு வருஷம் என்றால் சும்மாவா?

**ப**தினெட்டு வருஷத்தில் எத்தனை வார்த்தைகள் பேசியிருப்பார்கள்? இப்போது தினம் பதினெட்டு வார்த்தைகளுக்கு மிகாது! அத்தனை சொற்பம் அவர்கள் பரஸ்பர உரையாடல். கட்டிலுக்கருகில் ஒரு 'எழுந்தாச்சா?' குளித்துவிட்டு மேசைக்கு அருகில் ஒரு 'தயாரா?' செய்தித்தாளால் முகத்தை மறைத்துக் கொண்டு சிற்றுண்டி. அலுவலகம் புறப்படும் போது 'போய் வருகிறேன்.' கையசைப்பு இல்லை, கன்னத்தில் பரிவுடன் ஒரு தட்டு இல்லை. மாலை வந்ததும் உடை மாற்றிக் கொண்டு சீட்டாடப் புறப்படுவான். இரவு திரும்பும்போது பெரும்பாலும் சாப்பாடு மேசை மேல் வைத்திருக்கும். மௌனமாக எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடுகையில், அவள் தூங்கிப் போயிருப்பாள். இரண்டு பேருக்கும் தனித் தனி சாவி. தனித்தனித் தீவு! வாரம் ஒரு முறை அல்லது இரு முறைதான் நிமிர்ந்து ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வார்கள். வருஷத்தில் அவள் அறையில் ஒரு முறை கூட நுழைந்தது கிடையாது.

விடுமுறை நாட்களில் தாமதித்து எழுந்திருப்பான். விளையாடப் போய் மத்தியானம் வரும்போது அவள் தொலைக்காட்சியில் மூழ்கியிருப்பாள். இவனைக் கண்டதும் எழுந்து சமையலறைக்குச் சென்று மௌனமாகப் பரிமாறுவாள். சில சமயம், ''வேலைக்காரி வரலை.''

''ஓ!''

''சாயங்காலம் சினிமா போகலாம்னு இருக்கேன்.''

''போய்ட்டு வாயேன்.''

''நீங்க?''

''நான் வரலை.''

— அதிகப்படியாக இவ்வளவுதான் உரையாடல்.

**சு**தர்சன்தான் யோசனை சொன்னான்.

ஓர் அனாதைக் குழந்தையை எடுத்து வளருங்களேன்.''

''இல்லை சுதர்சன். அதனால் எங்களுக்குள்ள பிரச்னை தீர்ந்துடும்னு தோணலை.''

''உங்க பிரச்னை என்னன்னு தெரியலை.''

''ரெண்டு பேருக்கும் இடையே ஒரு தனிமை தொடர்கிறது! விடுதியில் இருக்கிற மாதிரி இருக்கோம். எப்படி ஆச்சுன்னே தெரியலை. ஆரம்பத்தில் தினம் பேசிச் சிரிச்சுக்கிட்டுத்தான் இருந்ததா ஞாபகம்.''

''இதுக்கு யாரு காரணம்?''

**மத்யமர் — வாசகர் விமர்சனம்**

**உடனே எழுதுங்கள்!**

மத்யமர் வரிசையில் இடம்பெறும் சுஜாதாவின் இந்தக் கதை உங்களுக்குள் என்ன பாதிப்பை ஏற்படுத்தியது? பாதிப்புக்குக் காரணம் கதையின் கருவா, நடையா, பாத்திரப் படைப்பா? 'நீலப் புடைவை, ரோஜாப்பூ'வைப் பற்றி இவ்வாறு சுருக்கமாக அஞ்சல் அட்டையில் எழுதி அனுப்புங்கள்.

பிரசுரமாகும் விமர்சனங்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 25 பரிசு. சிறந்த விமர்சனத்துக்கு + ரூ 25!

உங்கள் விமர்சனங்களை 5.7.90க்குள் வந்து சேரும்படி அனுப்பி வையுங்கள்.

— ஆசிரியர்

"இரண்டு பேரும்தான்! பிடிவாதம். எங்க மண வாழ்க்கையில் நிகழ்ந்த வெவ்வேறு சம்பவங்கள், அறியாமை, புரியாமை, பொறாமை..."

"உனக்கு என்ன வேண்டும்? விவாகரத்தா?"

"இப்ப இல்லை."

"பின்னே?"

"எனக்கு மாறுதல் வேணும்..."

சுதர்சன் மூன்றாம் நாள் தொலைபேசினான். "மோகன் ஒரு காரியம் பண்ணு. உன் மனத்தில் இருக்கிறதை ஒரு கடிதமா எழுது!"

"யாருக்கு?"

"யாரோ ஒருத்திக்கு... ஏன் 'யாரோ ஒருத்திக்கு'ன்னு ஆரம்பித்தே எழுது. எல்லாவற்றையும் எழுது."

"எழுதி?"

"ஒரு தபால் பெட்டி எண் முகவரி கொடுப்பேன். யாரிடமும் சொல்லாதே. அதற்குத் தபாலில் அனுப்பு. உன் பெயரைப் போடாதே. முதலில் வேறு பெயரில் அனுப்பு."

"அனுப்பினால்?"

"நடக்கிறதைப் பாரேன்."

மறுதினமே அந்தக் கடிதத்தை எழுதி அனுப்பினான். அச்சடித்த காகிதம் பதிலாக வந்தது. உங்கள் கடிதத்துக்கு வரும் பதில்களை உங்களுக்கு அனுப்புமுன் எங்கள் விதிமுறைகளை அறிந்து கொள்ளுங்கள்:

1. எக்காரணம் கொண்டும் கடிதம் எழுதுபவர்கள் சந்தித்துக் கொள்ளக் கூடாது.
2. சொந்தப் பெயர்களைப் பயன்படுத்தாதீர்கள்.
3. எந்தவிதமான விளைவுகளுக்கும் நாங்கள் பொறுப்பல்ல.
4. உடன் ரூ.100க்கு காசோலை அனுப்புங்கள். (இது எங்கள் நிர்வாகச் செலவுகளுக்கு)

அவன் எழுதிய முதல் கடிதத்துக்கு எட்டு பதில் கடிதங்கள் வந்தன. அவற்றில் வினுவின் கடிதம்தான் அவன் மனத்தைக் கவர்ந்தது!

அன்புள்ள ஸ்ரீமான் நரேஷ்,

பல்வேறு காரணங்களால், (விதி என்று ஒப்புக் கொள்ள விருப்பமில்லை) நாம் தப்பான உறவுகளில் சிக்கிக் கொள்கிறோம். திருத்தி, மாற்ற இந்திய சமூகம் அனுமதிப்பதில்லை. உங்கள் கடிதத்தைப் பார்த்த போது நம் இருவர் தனிமையிலும் ஒரு பொது சோகம் இருப்பது புரிந்தது. பொது நிவர்த்தியும் இருக்கலாம். என் பெயர் வினு. நான நிறையப் படிப்பேன். எனக்கு வசந்த நாள் காலையும் புதிதாகப் பிறந்த கன்றுக் குட்டிகளும் ஓடும் மேகங்களும் என் ஜன்னல் வழியே கூப்பிடும் பெயர் தெரியாத பறவைகளும் பிடிக்கும். பெண் விடுதலையில் எனக்கு நம்பிக்கையில்லை. பெண்ணுக்கு நிஜ விடுதலை கிடையாது. உங்கள் கடிதத்திலிருந்து உங்களுடன் பேசலாம் என்று ஆசை ஏற்படுகிறது. விருப்பமா?

வினு.

விருப்பம் என்று சொல்ல, இருவரிடையே பத்துப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை கடிதப் பரிமாற்றம் ஏற்பட்டு, இருவரும் ஒருவரை ஒருவர் படிப்படியாக அறிந்து கொள்ள முடிந்தது. வினுவுக்கு உர்ஸுலா என்னும் ஆங்கில எழுத்தாளியும் ப்ரெஞ்சுப் புரட்சியின் போது பெண் விடுதலை பேசிய மேரி என்பவளும் பிடிக்கும். தாகூர், கிருஷ்ணமூர்த்தி, ஆண்டாள், அக்கமகாதேவி, காரைக்கால் அம்மையார் என்று பலரையும் பற்றி எழுதினாள். மோகனுக்கு அவளுடைய உன்னத வாக்கியங்களுக்கு ஈடாக எழுத முடியா விட்டாலும் "பரவாயில்லை. உங்கள் வார்த்தைகளில் உள்ள யோக்கியம் போதும்" என்றாள்.

இருவரும் விதிகளை மீறிச் சந்தித்துக் கொள்ளலாம் என்கிற சதி எண்ணம், எட்டாவது கடிதத்தில். "எழுத்துக்கும் கடிதங்களுக்கும் ஒரு ஸ்பரிச எல்லை இருக்கிறது அதை மீறலாமா?" என்று தைரியமாகக் கேட்டு எழுதி விட்டான். அதற்கு அவள் ஒன்பதாவது கடிதம் முழுதும் ஏன் கூடாது என்று ஒரு பக்கம் காரணம் எழுதி விட்டு, "நான் மேலே எழுதியது அத்தனையும் பாசாங்கு; எனக்கும் உங்களைப் பார்க்கத்தான் ஆசை!"

சுதர்சனிடம் சொன்ன போது "தயவு

●● எறும்புத் தொல்லை ஒழிய, கொஞ்சம் புகையிலை கலந்த நீரை எறும்புப் புற்றில் விட்டால் போதும்.

செய்து அது மட்டும் செய்யாதே மோகன். அது துரோகம்!''

''யாருக்கு?''

''முதலில் உன் மனைவிக்கு. அதன்பின் இந்த சினேகிதத்தை ஏற்பாடு செய்து கொடுத்த இந்த சங்கத்தின் நம்பிக்கைக்கு...''

''நாங்கள் சந்திப்பதால் இவர்களுக்கு என்ன?''

''சொன்னால் புரியாது. சந்திப்பதை விட அதன் எதிர்பார்ப்பில்தான் வசீகரம் உள்ளது. அந்தப் பெண்ணை நீ சந்தித்து விட்டால் எதிர்பார்ப்பு மறைந்து விடும்... அவள் எப்படி இருப்பாள் என்று நீ எதிர் பார்க்கிறாய்?''

''அப்படி எதுவும் இல்லை.''

''பொய்!''

''அவள் எப்படி இருந்தாலும் அவளை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்.''

''ஏற்றுக் கொண்டு...? அதன்பின் என்ன?''

''முதலில் அவளைச் சந்திக்கிறேன்.''

''இந்தச் சிக்கல்தான் வேண்டாம் என்கிறது எங்கள் அமைப்பு. அனாவசியத்துக்கு நீ மறு கல்யாணம் என்று வக்கீல்கள் பின்னால் விவாகரத்துக்கு அலைவாய். உன் கதி சரி. உன் மனைவி கதி என்ன ஆவது? அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறதா?''

''கேட்கவில்லை.''

''எதற்காக ஒரு அழகான கவிதையைக் கலைக்கிறாய்? தொடர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருங்கள். ஆனால் சந்திக்காதீர்கள். எந்த உறவும்... பார்த்தல், பேசுதல், தொடுதல் என்று இறங்கும் போது விழுந்து விடுகிறது. உச்சகட்டம் கடந்து விடுகிறது. மோகன், சில கேள்விகளுக்குப் பதில் தெரியாமல் இருப்பதே நல்லது என்று விஞ்ஞானிகள் கூட இப்போது நினைக்கிறார்கள்! உன் வாழ்க்கையைச் சிக்கலாக்காதே அவ்வளவு தான்.''

அவன் சொன்னதை முழுவதும் அவளுக்கு எழுதினான். அதற்குப் பதில் ''நண்பர் சொல்வது உண்மைதான்! இருந்தும் சந்திப்போம். விதிகளை விட விதிகளை மீறலில் தான் வசீகரம்.''

**த**லைமுடிச் சாயம், ஷாம்பு எல்லாம் முடிந்த பின் மூக்கிலிருந்து எட்டிப் பார்த்த ஒற்றை நரையை லாகவமாக கத்தரி நுனியால் நாவிதர் வெட்டி அவனை நாற்காலியிலிருந்து விடுவித்தார்.

''எத்தனைப்பா?''

''குடுங்க உங்க இஷ்டம்.''

அவன் பிரதிபிம்பம் அவனுக்கே பிடித்திருக்க, பத்து ரூபாய் கொடுத்தான்.

**ம**றுநாள் வீட்டை விட்டுக் கிளம்பும் போது பத்மாவைக் கூப்பிட்டான். பதில் இல்லை. அவள் அறையில் எட்டிப் பார்த்த

போது கண் மூடி படுத்திருந்தாள். அவளைப் பார்க்கக் கொஞ்சம் இரக்கமாக இருந்தது. நான் இல்லாமல் இவளால் தனித்து வாழ முடியுமா? அண்ணன், அக்கா வீட்டில் இவளைச் சம்மதிப்பார்களா? அனுமதிப் பார்களா?

சே! சும்மா பார்க்கத்தானே போகிறேன். வேறு என்ன? ஏன் இப்போதே எல்லா சிக்கல்களையும் யோசிக்க வேண்டும்.

செங்கல்வராயன் பூங்காவில் கூட்ட மில்லை. வானொலி தழை உரம், அடி உரம் பற்றி விவசாயம் பேசிக் கொண்டிருக்க, ஓய்வாளிகள் முழுக்கை சட்டையுடன் கோல் மேல் கை, கால் மேல் கால் என்று கல் நாற்காலிகளில் வீற்றிருந்து பேசிக் கொண் டிருந்தார்கள்.

பதற்றத்துடன் அவன் பூங்காவின் வாச லுக்கு வந்து நின்றான். வெளிர் நீலத்தில் சட்டை அணிந்து, கையில் ஒரு ரோஜா வைத்திருந்தான். அதை அடிக்கடி முகர்ந்து பார்த்துக் கொண்டான். பலர் பல திசை யிலும் போய் வந்து கொண்டிருந்தார்கள். எதிரே பட்டுப் புடைவைக் கடை வாசலில் கணவர்கள் காத்திருந்தார்கள். தண்ணீர் லோட்டாவுக்குச் சங்கிலி போட்டிருந்தது. கை வண்டி நிறைய மாம்பழங்கள் அடுக்கி யிருந்தது. ஓடுகிற பேருந்திலிருந்து மூலைத் திருப்பத்தில் மாணவர்கள் இறங்க, முன் பக்க கணவனின் தொடையைத் தொட்டுக் கொண்டு மனைவிமார் இரு சக்கரப் பிர யாணம் செய்தனர். எதிரே பள்ளிப் பிள்ளை களின் பிரார்த்தனைப் பாடல் ஒலித்தது.

விநுவை இன்னும் காணோம்.

கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ஆறு நாற்பது. பத்து நிமிஷம்தான். சரியாக ஏழு வரை பார்க்கலாம். இந்த வாசல்தானே.. சட்டென்று எதிரே மற்றொரு வாசல் இருப் பதைக் கவனித்தான். அது இதை விடச் சிறியது. செங்கல்வராயன் பூங்கா என்று இங்குதான் பெயர் எழுதியுள்ளது. இது தான். ஒருவேளை அதுவோ? எதற்கும் ஒரு முறை அங்கே போய் பார்த்து விடலாம்! சட்டென்று பார்த்து விட்டு வந்து விடலாம். மணி 6:50. அங்கே போன போது, தூரத்தி லேயே நீலப் புடைவையைப் பார்த்து விட்டான். அவன் இதயம் ஒருமுறை துடிப்பில் தடுக்கியது. வேகமாக நடந்து அவளை அணுக அவள் நல்ல சிவப்பாக உயரமாக இருப்பதைக் கவனித்து இதயம் இன்னும் சில துடிப்புக்களைத் தவற விட, "விநு! விநு!" என்று அழைத்துக் கொண்டே வேகமாக அணுக, அவள் சட்டென்று சாலையைக் கடந்து அந்தப் பக்கம் செல்வதைக் கவனித்தான்.

இவன் அந்த இடத்தை அடைந்து குறுக்கே கடப்பதற்குள் பேருந்துகள் 'விருட் விருட்'டெனக் கடந்து செல்ல, எதிர்சாரியை அடைவதற்குள்...

அவளைக் காணவில்லை.

திடுக்கிட்டு இருபுறமும் பார்த்த போது தூரத்தில் வாடகை ஊர்தியில் அவள் சென் றது போலத் தெரிந்தது.

சே! என்ன முட்டாள் நான். இத்தனை நேரம் காத்திருந்து விட்டு நான் வரவில்லை என்று தீர்மானித்துப் புறப்பட்டுச் சென்று விட்டாள். ஊர்தியின் எண்ணைக் குறித்து வைக்க முடியவில்லை. என்னை அவள் பார்க்கவில்லை. இத்தனை நேரம் காத் திருந்து விட்டுப் புறப்பட்டு விட்டாள்! என்ன நினைத்துக் கொள்வாள்? கோழை என்றுதானே! இவள்தானோ! ஆம் இவள் தான். ரோஜாவைப் பார்த்தோமோ? இவள் தான்! ஒரு வாய்ப்பை இழந்தேன்!

மோகனுக்கு அழுகை வந்தது. இனி என்ன? அடுத்த கடிதம் வரும் வரை காத் திருக்க வேண்டும். ஒருவேளை 'இயக்கத்து'க் குத் தகவல் தெரிந்து அவர்கள் அழைத் துச் சென்றார்களோ! இல்லை இல்லை... எதற்கும் அடுத்த கடிதம் வரை காத்திருக்கத் தான் வேண்டும்!

வீட்டுக்குத் திரும்பிய போது பத்மா வாசல் கதவைப் பூட்டிக் கொண்டிருந்தாள். "சாவி குடு நான் வந்தாச்சு" என்றான்.

அவள் சாவியை அவனிடம் கொடுத்து விட்டு, "கோயிலுக்குப் போறேன்; வரீங் களா?" என்றாள்.

"நான் வரலை. நீ போ!"

"ஏன்?"

"எனக்கு மனசு சரியில்லை" அவள் அவனை வெறித்துப் பார்த்தாள்.

"உங்க கூட பேசணும்."

"அப்புறம்! அப்புறம்!"

அவளைச் சற்று நேரம் நிமிர்ந்து பார்த்த நேர்ப் பார்வையை அவன் தவிர்த்தான். அவன் மனசில் ஏமாற்றம் பொங்கி வழிந் தது. அழுகை வரும் போல இருந்தது. சட்டையை உரிக்கும் போது எதிரே கண்ணாடியில் அவன் கன்னங்கரேல் என்ற தலைமயிர் இப்போது பரிதாபகரமாக அவன் முகத்தில் தெரிந்த ஆயாசத்துக்குப் பொருத்தமில்லாமல் இருந்தது. காகிதம் தேடி எழுதத் துவங்கினான்.

"விநு என்னை மன்னித்து விடு. குழப்பம், குழப்பம். நீ வந்த வாசல் எது நான் நின்ற வாசல் எ..."

என்று ஆரம்பித்த கடிதத்தின், பாதியில் பேனா மக்கர் பண்ணியது. பத்மாவின் அறைக்குச் சென்று அலங்கார மேசையின் இழுப்பறைக்குள் பேனா தேடினான். கிடைக்கவில்லை. கண்ணாடி வழியாகப் பத்மாவின் படுக்கையைப் பார்த்துத் திடுக்கிட்டான்...

நீலப் புடைவையும் ஒரு ரோஜாவும் படுக்கை மேல் இருந்தன.

●● பெருங்காயம் கெட்டியாகிவிட்டால், சில பச்சை மிளகாய்களுடன் அதைப் போட்டு வைத்தால் மென்மையாகிவிடும்.




அத்தியாயம் 87

## புலவரின் திகைப்பு

அருள்மொழி வர்மருக்குத் திரு முடி சூட்டு விழா நெருங்க நெருங்க, சோழ நாடு முழுவதும் ஒரே கோலாகலமாகி வந்தது. பொன்னியின் செல்வருக்குப் பொன் முடிசூடுவது குறித்து மக்களிடையில் மாறுபட்ட அபிப்பிராயமே காணப்படவில்லை. சோழ நாட்டு ஆண்கள், பெண்கள், வயோதிகர்கள், குழந்தைகள், நகர மாந்தர், கிராமவாசிகள், வர்த்தகர்கள், உழவர்கள் அனைவரும் ஒரு முகமாகப் பொன்னியின் செல்வருக்கு முடி சூட்டுவதைக் குதூகலமாக வரவேற்றார்கள். அவர் பிறந்த வேளையைப் பற்றியும், அவர் முகத்தின் களையைப் பற்றியும், அவருடைய இனிய குண நலங்களைப் பற்றியும், குடி மக்களிடம் அவர் கலந்து பழகும் அருமைப் பண்பைப் பற்றியும் அனைவரும் சொல்லிச் சொல்லி வியந்து மகிழ்ந்தார்கள்.

இராமருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைக்கத் தசரதர் முடிவு செய்து விட்டார் என்று அறிந்ததும் அயோத்தி மக்கள் எல்லாரும் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தார்கள் என்பதை இராம காதை நன்கு வர்ணிக்கிறது.

வயது முதிர்ந்த பெண்மணிகள் எல்லாரும் கோசலையைப் போல் ஆகிவிட்டார்களாம். தத்தம் புதல்வர்களுக்கே மகுடாபிஷேகம் ஆகப் போவதாக எண்ணி மகிழ்ந்தார்களாம். இளம் பெண்கள் எல்லாரும் சீதா தேவி அடைந்த ஆனந்தத்தைத் தாங்களும் அடைந்து, தத்தம் கணவன்மார்களுக்கே முடி சூட்டப் போவதாகக் கருதித் தங்களை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக் கொண்டார்களாம். அயோத்திமா நகரத்தில் வாழ்ந்த முதிய பிராயத்து ஆண் மக்கள் எல்லாரும் தசரதனைப் போல் ஆகிவிட்டார்களாம்.

**மாதர்கள் வயதின்மிக் கார்**
**கோசலை மனத்தைஒத் தார்;**
**வேதியர் வசிட்டன்ஒத் தார்;**
**வேறுள மகளிர்எல் லாம்**
**சீதையை ஒத்தார்; அன் னாள்**
**திருவினை ஒத்தாள்; அவ் வூர்**
**சாதன மாந்தர்எல் லாம்**
**தயரதன் தன்னைஒத் தார்.**

என்று அயோத்தி மக்களின் மனோ நிலையைக் கம்ப நாடர் அற்புதமாகச் சித்திரித்திருக்கிறார்.

அவ்வாறு அயோத்தி மக்களின் உள்ளன்பையும் நன்மதிப்பையும் அடைவதற்கு இராமர் என்ன அருஞ் செயல் புரிந்திருந்தார்? அவருடைய கோதண்டத்தின் மகிமையெல்லாம் பிற்காலத்தில் அல்லவா வெளியாவதற்கு இருந்தது? இராவணன் முதலிய ராட்சதர்களை வதம் செய்து மூன்று உலகங்களுக்கும் பயத்திலிருந்து விடுதலை அளித்த பெருமை பின்னால் அல்லவா அவரைச் சேர்வதாக இருந்தது? விசுவாமித்திர முனிவரோடு சென்று அவருடைய யாகத்தைப் பூர்த்தி செய்வித்து விட்டு வந்தார் என்பது

அமரர் கல்கி

அயோத்தி மக்களுக்கு அவ்வளவாக இராமருடைய பெருமையை உயர்த்திக் காட்டியிராதல்லவா? ஏன்? விசுவாமித்திரர் திரும்பி அயோத்திக்கு வந்து அதைச் சொல்லக் கூட இல்லையே?

இந்த உலகில் சிலர் செயற்கரிய வீரச் செயல்களும், பரோபகாரச் செயல்களும் புரிந்து மக்களின் உள்ளத்தைக் கவர்கிறார்கள். இன்னும் சிலர் இசை பாடியும், நடனம் ஆடியும், கவிதை புனைந்தும், சித்திர சிற்பக் கலைகளில் அற்புதங்களை அளித்தும் பிறருடைய போற்றுதலுக்கு உள்ளாகிறார்கள். வேறு சிலர் கருவிலேயே திருவுடையோராய், பிறக்கும் போதே சிறப்புடையோராய்ப் பிறந்து விடுகிறார்கள். குறிப்பிடக் கூடிய காரணம் எதுவும் இன்றிப் பார்ப்பவர்களுடைய உள்ளங்களையெல்லாம் கவர்ந்து வசீகரிக்கக் கூடிய சக்தியை இயற்கை அன்னை அவர்களுக்கு அளித்து விடுகிறாள். ஆகா! இயற்கை அன்னை மிக்க பாரபட்சம் உடையவள் போலும்! ஆனாலும் நாம் என்ன கண்டோம்? இயற்கை அன்னை அத்தகைய வசீகர சக்தியை அவர்களுக்கு அளிக்கும் போது அதற்கு இணையாக வேறு என்ன பிரதிகூலமான அம்சங்களையும் அளித்திருக்கிறாளோ, நமக்கு என்ன தெரியும்?

அவ்வளவு தூரம் அயோத்தி மாந்தரின் உள்ளன்பைக் கவர்ந்து, அவர்களுடைய போற்றுதலுக்கு உரியவராயிருந்த இராமர், உலகில் சாதாரண மனிதர் யாரும் அடையாத துன்பங்களையெல்லாம் அடைய வேண்டியிருந்ததல்லவா? நாட்டைத் துறந்து, காட்டுக்குச் சென்று, காதல் மனைவியைப் பறி கொடுத்து, சொல்லுவதற்கு இயலாத மனவேதனைப் பட வேண்டி நேர்ந்ததல்லவா?



ருள் மொழி வர்மர் இயற்கை அன்னையின்பட்சபாதமான சலுகைக்குப் பாத்திரமானவர். அவருடைய தோற்றமே அவரைப் பார்த்தவர்கள் அனைவர் மனத்தையும் வசீகரித்தது. அவருடைய இனிய பேச்சும் பண்புகளும் அவருடன் பழக நேர்ந்தவர்கள் எல்லாருடைய அன்பையும் கவர்ந்தன. ஈழ நாட்டுப் போர்க்களத்துக்கு அவர் சென்றிருந்தபோது அவ்வளவாக வீர தீரச் செயல்கள் புரிவதற்குச் சந்தர்ப்பங்கள் கிட்டவில்லை. ஆயினும் அவருடைய வீரப் பிரதாபங்களைப் பற்றிய கற்பனைச் செய்திகள் பல சோழ நாடெங்கும் பரவி வந்தன. ஒருவரிடம் நாம் அன்பு கொண்டு விட்டால், அவரைப் பற்றிய எவ்வளவு மிகைப் படுத்தப்பட்ட புகழுரைகளையும் எளிதில் நம்புவதற்கு ஆயத்தமாகி விடுகிறோம் அல்லவா?

சுந்தர சோழர் நோய்வாய்ப்பட்டு நடமாடவும் சக்தியில்லாமல் போன காலத்திலிருந்து, அரசுரிமை சம்பந்தமான குழப்பங்கள் சோழ நாட்டில் ஏற்படக் கூடுமோ என்று மக்கள் கவலைப் பட்டு வந்தார்கள். பழுவேட்டரையர், சம்புவரையர் முதலிய குறுநில மன்னர்களும், பெருந் தரத்து அதிகாரிகளும் சுந்தர சோழரின் புதல்வர்களுக்கு விரோதமாகக் கண்டராதித்தருடைய மகனுக்குப் பட்டம் கட்டச் சதி செய்கிறார்கள் என்னும் வதந்தியும் பரவியிருந்தது.

கண்டராதித்தருடைய குமாரன் மதுராந்தகனுக்கு விரோதமாகச் சொல்லக் கூடியது எதுவும் மக்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆனால் மதுராந்தகன் மக்களிடையில் வந்து கலந்து பழகியதுமில்லை. தந்தையைப் போல் உலக வாழ்க்கையில் வெறுப்புற்றுச் சிவ பக்தியில் ஆழ்ந்திருக்கிறான் என்பது மட்டும் தெரிந்திருந்தது. விஜயாலய சோழர் காலத்திலிருந்து சோழ ராஜ்யம் விரிந்து பரந்து வந்ததையும், வர்த்தகம் செழித்து மக்களின் வாழ்க்கை உயர்ந்து வந்ததையும், சோழ சைன்யங்கள் வெற்றி கொண்ட நாடுகளிலிருந்து பலவிதச் செல்வங்கள் சோழ நாட்டில் வந்து குவிந்து கொண்டிருந்ததையும் பார்த்துக் களித்துப் பெருமிதம் அடைந்திருந்த மக்கள், சோழப் பேரரசு மேலும் மேலும் பல்கிப் பரவித் தழைக்க வேண்டுமென்று விரும்பினார்கள். சிவ பக்தியில் முழுக்க முழுக்க ஈடு பட்ட மதுராந்தகர் சிங்காதனம் ஏறினால், சோழ ராஜ்யத்தின் முன்னேற்றம் தொடர்ந்து நடைபெற முடியுமா என்று ஐயுற்றார்கள். அது மட்டு மன்றி, மதுராந்தகர் பட்டத்துக்கு வந்தால் சிற்றரசர்கள் வைத்ததே சட்டமாயிருக்கும் என்று மக்கள் அஞ்சினார்கள்.

ஆதித்த கரிகாலரைப் பற்றி வீராதி வீரர் என்ற பெருமதிப்பு மக்களுக்கு இருந்தாலும், அவர் சிங்காதனம் ஏறுவது பற்றியும் அவ்வளவாக உற்சாகம் கொள்ள இடமில்லாமலிருந்தது. ஆதித்த கரிகாலரிடம் மக்களை வசீகரிக்கும் இனிய சுபாவம் இல்லை; எல்லாருடனும் அவர் சரளமாகக் கலந்து பழகுவதில்லை. இதையன்றி, கரிகாலரைப் பற்றி மர்மமான பல வதந்திகள் உலாவி வந்தன. அவர் ஏதோ பெரிய குற்றம் செய்து விட்டார் என்றும், அவருடைய மனச்சாட்சியே அதற்காக அவரை வருத்திக் கொண்டிருக்கிறதென்றும், அதனாலே தந்தை சுந்தர சோழரின் அபிமானத்தை இழந்து விட்டார் என்றும் வதந்திகள் பரவியிருந்தன. இன்னும் பலவிதமான கற்பனைக் கதைகளும் கட்டி விடப்பட்டிருந்தன. ஆகையால் அவர்

●● சாதம் குழைந்து போய்விட்டால், கவலைப்பட வேண்டாம். கூடக் கொஞ்சம் குளிர்ந்த தண்ணீரையும், நெய்யையும் சேர்த்துச் சில நிமிடங்கள் உலர வையுங்கள். தண்ணீரை வடித்தால் சாதம் பொல பொலவென்றிருக்கும்.

அகால மரணமடைந்த போது ஒரு மகா வீரனுக்குரிய மரியாதையை மக்கள் செலுத்தினாலும் அதிகமாக துக்கப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. வால் நட்சத்திரத்தின் பேரில் பழியைப் போட்டு விட்டு ஒருவாறு மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டார்கள்.

பெரிய பழுவேட்டரையரின் மரணமும், அது நேர்ந்த விதமும் மக்களுடைய உள்ளத்தில் அவர் பேரில் புதியதொரு அபிமானத்தையும் மரியாதையையும் உண்டாக்கியிருந்தது. அந்த வீரக் கிழவர் முதுமைப் பிராயத்தில் மணந்து கொண்ட மாய மோகினி உண்மையில் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளைச் சேர்ந்தவள் என்றும், அவளுடைய தூண்டுதலினாலேதான் பெரிய பழுவேட்டரையரின் மனம் கெட்டுப் போயிருந்ததென்றும், ஆதித்த கரிகாலரின் அகால மரணத்துக்குப் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளே காரணம் என்றும், உண்மையை அறிந்து கொண்டதும் பெரிய பழுவேட்டரையர் செய்த குற்றத்துக்குப் பிராயச்சித்தமாகத் தம்மைத் தாமே மாய்த்துக் கொண்டார் என்றும் வதந்திகள் பரவி விட்ட பிறகு, ஜனங்கள் பெரிய பழுவேட்டரையரைக் குறித்து. ''ஐயோ! பாவம்!'' என்று அனுதாபப்பட்டார்கள். அவர் இறப்பதற்கு முன்னால், ''மதுராந்தகருக்குப் பட்டம் கட்டும் எண்ணத்தை விட்டு விடுங்கள். பொன்னியின் செல்வருக்கே முடி சூட்டுங்கள்!'' என்று மற்ற குறுநில மன்னர்களுக்குக் கட்டளையிட்டு விட்டுச் சென்றார் என்பதும் அவரிடம் மக்களின் மரியாதையை அதிகப்படுத்தியது. மக்களின் மனத்தில் உள்ள விருப்பம் நிறைவேறுவதற்கு ஒரு பெரிய தடங்கலை நிவர்த்தி செய்து விட்டல்லவா அந்த மாபெரும் வீரக் கிழவர் உயிரை நீத்தார்? அவருடைய நினைவு வாழ்க! அவருடைய குலம் வாழ்க! — இவ்வாறு ஜனங்கள் நன்றி உணர்ச்சியுடன் அவரைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள்.

மதுராந்தகத்தேவர் விஷயத்தில் ஆள் மாறாட்டம் நடந்திருக்கிறது என்னும் விவரம் பொது மக்களில் யாருக்குமே தெரிந்திருக்கவில்லை. அரச குடும்பத்தினரையும், அவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்களையுந் தவிர வேறு யாருக்கும் அந்தச் செய்தி தெரியாது. பழைய மதுராந்தகர் பெரும்பாலும் அரண்மனைக்குள்ளேயே பொழுது கழித்தார். மிக அபூர்வமாகவே வெளிப் புறப்பட்டார். அந்தச் சந்தர்ப்பங்களிலும் அவர் பொது மக்களுடன் கலந்து பழகுவதில்லை. அவருக்கு முடிசூட்டு பேச்சு நடந்து கொண்டிருந்தபோது மூடுபல்லக்கில் வைத்து அவரை அழைத்துக் கொண்டு போவது வழக்கமாயிருந்தது. அவருடைய அங்க அடையாளங்களைக் கூர்ந்து கவனிக்கப் பொது ஜனங்களுக்குச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. ஆகையால் பழைய மதுராந்தகர் போய், புதிய மதுராந்தகர் வந்துள்ள விவரமே மிகப் பெரும்பாலான மக்களுக்குத் தெரியாமலிருந்தது.

ஆதலின் திருவையாற்றில் நடந்த திருவாதிரைத் திருவிழாவில் புதிய மதுராந்தகரைப் பார்த்தவர்கள் எவரும் ஆள் வேற்றுமை எதுவும் இருப்பதாக அறியவில்லை. அவர் மனைவி பூங்குழலி மட்டும் சிலருடைய கவனத்தைக் கவர்ந்தாள். அந்தப் பெண் 'சின்னப் பழுவேட்டரையருடைய மகள்' என்று சிலர் கூறியதை மற்றும் சிலர் மறுத்துரைத்தார்கள். கடலில் படகு செலுத்தி வந்த ஓடக்காரப் பெண் இவள் என்றும், மதுராந்தகர் சமீபத்தில் இவளை மணந்து கொண்டார் என்றும் சொன்னார்கள்.

அரச குடும்பத்தினரும் குறுநில மன்னர்களும் பலதார மணம் செய்து கொள்வது அந்நாளில் சாதாரணமாக இருந்தபடியால் யாரும் அதைப் பற்றி வியப்பு அடையவில்லை. சிற்றரசர்கள் பலர் தூண்டியும் மதுராந்தகத் தேவர் தமக்குப் பட்டம் வேண்டாம் என்று சொல்லி விட்டார் என்னும் வதந்தி மக்களுக்குப் பொதுவாகவே அவரிடம் மரியாதையை உண்டு பண்ணியிருந்தது. சிவ பக்தியில் திளைத்துப் பரவச நிலையை அடைந்திருந்த அவருடைய தோற்றமும் அந்த மரியாதையை வளர்த்தது. ''ஓடக்காரப் பெண்ணாகிய பூங்குழலியை முன்னிட்டே மதுராந்தகர் சோழ சிங்காதனத்தை விரும்பவில்லை'' என்ற பேச்சு இன்னும் பலருடைய அபிமானத்தை அவர் கவர்ந்து கொள்ளக் காரணமாயிருந்தது. பொன்னியின் செல்வருக்குப் பட்டாபிஷேகம் நடந்ததும் மதுராந்தகத் தேவருக்கு ஏதேனும் பெரிய பதவி அளிப்பார் என்றும் பேசிக் கொண்டார்கள்.

முடி சூட்டு விழாவுக்கு இரண்டு தினங்களுக்கு முன்னாலிருந்து சோழ நாட்டின் நானா திசைகளிலிருந்தும் ஜனங்கள் தஞ்சையைநோக்கி வரத்தொடங்கிவிட்டார்கள். தஞ்சைக் கோட்டைக்கு வெளியே ஒரே ஜன சமுத்திரமாகக் காட்சி அளித்தது. கோட்டையின் வாசற் கதவுகள் திறந்து விடப்பட்டன. கோட்டைக்குள் போவதற்கும் வெளியே



வருவதற்கும் முன்னம் இருந்த கட்டுப் பாடுகள் நீக்கப்பட்டன.

முடி சூட்டு நாளைத் தள்ளி வைத்துக் கொண்டால் சமாளிக்க முடியாத கூட்டம் சேர்ந்து விடும் என்றுதான் தை பிறந்த வுடனே நாள் குறிப்பிட்டிருந்தார்கள். இன்னும் ஜனங்களுடைய சௌகரியத்துக் காக வேறு பல ஏற்பாடுகளும் செய்திருந் தார்கள்.

கொடும்பாளூர் வேளார் தம்முடன் அழைத்துக் கொண்டு வந்திருந்த மாபெரும் தென் திசைப் படையில் மிகப் பெரிய பகு தியைப் பொன்னியின் செல்வர் கட்டளை யின் பேரில் திருப்பி அனுப்பி விட்டார். தம்முடன் ஆயிரம் வீரர்களை மட்டுமே வைத்துக்கொண்டிருந்தார். அவ்விதமே பழு வேட்டரையர் கட்சியைச் சேர்ந்த சிற்றரசர் கள் குடந்தைக்கு அருகில் கொண்டு வந்து நிறுத்தியிருந்த வீரர்களும் திருப்பி அவரவர் களுடைய இடத்துக்கு அனுப்பப்பட்டார்கள்.

சின்னப் பழுவேட்டரையர் கோட்டைப் பாதுகாப்புக்காக வழக்கமாக வைத்திருந்த வீரர்கள் மட்டுமே இப்பொழுது இருந் தார்கள்.

பழுவூர் வீரர்களும் கொடும்பாளூர் வீரர் களும் வேளக்காரப் படை வீரர்களும் தங்க ளுடைய பகை மாற்சரியங்களையெல்லாம் மறந்து ஒருவரை யொருவர் கட்டித் தழுவிக் கொள்வதும் கேலி செய்வதும் கூத்தாடிக்



குதூகலிப்பதுமாக இருந்தார்கள். முடி சூட்டு விழாவைப் பார்ப்பதற்குத் திரள் திரளாக வந்து குவிந்தவண்ணமிருந்த மக்களுக்கு அவர்கள் கூடிய வரையில் உதவியாக இருந்தார்கள். சில சமயம் வேடிக்கைக்காக வானர சேஷ்டைகளில் அவ்வீரர்கள் ஈடுபட்ட போதிலும் ஜனங்கள் அவற்றைப் பொருட்படுத்த வில்லை.

தஞ்சைக் கோட்டைக்கு உட்புறமும் புற நகரமும் தேவேந்திரனின் அமராவதி நகரத்தைப் போல் அலங்கரிக்கப்பட்டு விளங்கின. நகரில் உள்ள ஒவ்வொரு வீட்டுக்கும் வெளியூரிலிருந்து விருந்தாளிகள் வந்து குவிந்த வண்ணமிருந்தார்கள்.

கடைசியாக, மகுடாபிஷேகத்துக்குக் குறிப்பிட்ட தினத்தன்று சூரியன் உதயமாயிற்று. உதிக்கும் போதே பனித்திரளைப் போக்கிக் கொண்டு பொற்கிரணங்களைப் பரப்பிக் கொண்டு தேஜோ மயமாக உதித்த சூரியனைப் பார்த்த மாந்தர் அனைவரும், "இன்றைக்குப் பொன்னியின் செல்வருக்கு மகுடாபிஷேகம் அல்லவா? ஆகையால் சூரியனும் பொன்னொளி வீசித் திகழ்கிறான்!" என்று கூறி மகிழ்ந்தார்கள்.

மகுடாபிஷேகத்துக் குரிய வேளை வருவதற்கு வெகு நேரம் முன்னதாகவே, பட்டாபிஷேக மண்டபத்தின் வாசலில் ஜனத்திரள் சேர ஆரம்பித்து விட்டது. மண்டபத்துக்குள்ளே பொது மக்கள் அனைவரும் இடம் பெறுதல் இயலாத காரியம் அல்லவா? முடிசூட்டு வைபவம் நடந்த பிறகு, பொன்னியின் செல்வர் மண்டபத்திலிருந்து வெளியில் வந்து பட்டத்து யானை மீதேறி வீதி வலம் தொடங்கும் போதுதான் மக்கள் அனைவரும் அவரைக் கண்டு மகிழ முடியும். அதற்காக நேரங்கழித்து வர முடியுமா, என்ன? முன்னதாகவந்தால்,பொன்னியின்செல்வர் பொன்மகுடம் சூடிக் கொண்டு வெளி வரும் போதே அவரைப் பார்க்கலாமே!



குடாபிஷேக மண்டபத்துக்குள் அரண்மனையைச் சேர்ந்தவர்கள் வருவதற்குத் தனியான பின்புறப் பாதை இருந்தது. அதன் வழியாகச் சுந்தர சோழரும் வானமா தேவியும் அவர்களைத் தொடர்ந்து செம்பியன் மாதேவி, மதுராந்தகர், பூங்குழலி, குந்தவைப் பிராட்டி, வானதி ஆகியவர்களும் வந்து சேர்ந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர், சின்னப் பழுவேட்டரையர், சம்புவரையர், சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி, மலையமான் மிலாடுடையார், மற்றும் சிற்றரசர்கள், சாமந்தர்கள், வர்த்தக கணத் தலைவர்கள், கோட்டத் தலைவர்கள், பெருந்தர அதிகாரிகள், சிவாச்சாரியார்கள், விண்ணகர பட்டர்கள், தமிழ்ப் பெரும் புலவர்கள் ஆகியோர் வாசலில் கூடியிருந்த பெரும் ஜனக் கூட்டத்தில் புகுந்து முண்டியடித்துக் கொண்டு உள்ளே வந்து சேர்ந்தார்கள். கடைசியில், பொன்னியின் செல்வரும் வல்லவரையன் வந்தியத் தேவனும் தாமரை மலர் போல் அமைந்த திறந்த தங்க ரதத்தில் அமர்ந்து மகுடாபிஷேக மண்டபத்தின் வாசலை அடைந்தபோது, பூரண சந்திரனைக் கண்ட அலைகடலைப் போல் அந்த ஜன சமுத்திரம் ஜேகோஷம் முழக்கி ஆரவாரம் செய்தது.



குடாபிஷேகத்துக் குரிய வைதிகச்சடங்குகள் எல்லாம் நடந்தேறின. சோழ குலத்து மன்னர்கள் வழி வழியாகப் பட்டாபிஷேக தினத்தன்று சிரஸில் சூட்டிக் கொள்ளும் மணி மகுடம், மார்பில் அணியும் நவரத்ன மாலை, இடையில் தரிக்கும் உடைவாள், கையில் ஏந்தும் செங்கோல் ஆகியவற்றை ஒரு பெரிய சித்திரத் தாம்பாளத்தில் வைத்துச் சபையில் பெரியவர்கள் முன்னாலெல்லாம் கொண்டு போனார்கள். அவர்கள் அத் தாம்பாளத்தைத் தொட்டு ஆசி கூறினார்கள். பின்னர், ஆஸ்தானப் புலவராகிய நல்லன் சாத்தனார் எழுந்து நின்றார். அவருக்குப் பின்னால் கையில் யாழ் பிடித்த மங்கை ஒருத்தி நின்று, யாழின் நரம்புகளை மீட்டி இனிய சுருதியை எழுப்பினாள்.

புலவர் நல்லன் சாத்தனார் சோழகுலத்தின் தொல் பெருமையையும், அக் குலத்தில் பரம்பரையாக வந்து புகழ் பெற்ற வீர மன்னர்களின் வரலாற்றையும் இசையுடன் கலந்த சந்தப் பாடலாகப் பாடலுற்றார். அந்தப் பாடல் மிக நீண்டதாகவும் இந்தக் காலத்தவர் எளிதில் அறிந்து கொள்ள முடியாத அரிய நடையிலும் அமைந்திருந்த படியால், அதன் சாராம்சத்தை மட்டும் சுருக்கமாக இங்கே குறிப்பிடுகிறோம்:—

"சூரிய வம்சத்திலே தோன்றிய மனு மாந்தாவின் குலத்தில் சிபி என்னும் மன்னர் மன்னன் இருந்தான். அவன் ஒரு புறாவுக்குத் தான் அளித்த வாக்கை நிறைவேற்றி அதன் உயிரைக் காப்பதற்காகத் தன் உடலின் சதையை அறுத்துக் கொடுத்தான். அத்தகைய சிபியின் வம்சத்தில் அவனுக்குப் பின் தோன்றியவர்கள் 'செம்பியன்' என்று குலப் பெயர் சூட்டிக் கொண்டு பெருமையடைந்தார்கள். செம்பியர் குலத்தில் இராஜ கேசரி என்று ஒரு பேரரசன் தோன்றினான். அவன் மகன் பரகேசரி என்று புகழ் பெற்றான். இவர்களுக்குப் பின் தோன்றிய

## வட்டமேஜை

* "தொழிலாளருக்கு நிர்வாகத்தில் பங்கு" என்பது 'சர்க்கரை' என்று காகிதத்தில் எழுதியிருப்பது போலாகும். அது நடைமுறைக்கு வந்திடும் போதில் தான் அதன் உண்மையான "சுவை"யினை அனுபவித்து உணர்ந்திட முடியும்.

பெங்களூர். ப. மூர்த்தி.

* பல தொழிற்சங்கங்கள் அரசியல் கட்சிகளோடு ரகசியத் தொடர்பு கொண்டுள்ளன என்ற கருத்து அப்படி ஒன்றும் எளிதாக அலட்சியப்படுத்தி விடக் கூடிய ஒன்றல்ல. எனவே தொழிலாளப் பிரதிநிதிகளால் தெரிந்து கொள்ளப்படும் நிர்வாக ரகசியங்கள், அரசியல் காரணங்களுக்காகப் பகிரங்கமாகப் போட்டு உடைக்கப்பட்டு, தொழில் துறையில் பல அபாயகரமான சிக்கல்களை ஏற்படுத்தும் சாத்தியமுள்ளது.

சென்னை — 3. பி. ரவிச்சந்திரன்.

* 'முதல்வரின் பிறந்த நாள்' என்று தலையங்கத்தில் மேலும் அவரைச் சாட ஒரு சந்தர்ப்பம் எடுத்துக் கொண்டீர்களோ. எனப் பயந்து கொண்டே படித்தேன்.. அப்பாடி, உண்மையான புகழுரைகளுடன் சில தவறுகளையும் சுட்டியிருக்கிறீர்கள். பிடியுங்கள் பாராட்டுக்களை!

ஆட்டையாம்பட்டி. தேன்மொழி சந்திரசேகரன்.

* கலைஞர் எவ்வளவுதான் கல்கியைச் சாடினாலும், கல்கி அதையெல்லாம் பொருட்படுத்தாது, கலைஞரின் நிறைகுறைகளைக் கூறி 'கலைஞரின் பிறந்த நாள்' தலையங்கம் எழுதியிருப்பது, கல்கியின் நடுநிலை, சகிப்புத் தன்மை, காழ்ப்புணர்வு கொள்ளாமை ஆகியவற்றையே காட்டுகிறது.

தஞ்சாவூர் — 1. இரா. ஆதி நாராயணன்.

* சமீபத்தில் தமிழகத்தில் சுற்றுப் பயணம் மேற்கொண்ட பி. ஜே. பி. தலைவர் எல். கே. அத்வானியின் கருத்தையே தலையங்கம் பிரதிபலிக்கிறது. பெரியார், அண்ணா ஆகியோரின் கொள்கை வழி நடந்து தமது பிறந்த நாளுக்கு ரூ. 12,000 மதிப்புள்ள கேக் வெட்டிய பகுத்தறிவுச் செம்மல் கலைஞருக்கு, தமது ஆட்சியின் மீது மக்களின் அதிருப்தி வளர்வது தெரியாதா, என்ன? அறிவுரை சொல்வது கல்கியா விற்றே — குங்குமத்தில் நாலு பக்கம் எழுதி விடப் போகிறார்?!

கெங்கவல்லி. பூங்குழலி.

* 'ஜனனி' அவர்கள் எழுதிய பல்லக்கு சிறுகதை நேர்த்தி என்றால் அதற்கு 'ஸ்யாம்' தீட்டியுள்ள ஓவியம் நேர்த்தியோ நேர்த்தி!

மானாமதுரை. ஜெ. எம். முகமதுரஃபி.

* விஜயசந்த் ஜபக் — பாரஸ்மணி ஜபக் தம்பதி நடத்தும் குரு சரணாலயம் பற்றிய கட்டுரை வெளியிட்டமைக்கு (20.5.90 கல்கி) நன்றி. பால மலை சுவாமிக்குப் புற்றுநோய் வந்த போது கோவை, குப்புசாமி நாயுடு நினைவு மருத்துவமனையில் சிகிச்சை பெற்றார்; சென்னையில் அல்ல.

கோவை. ஆர். மனோஹரன்.

## உணருங்கள்!

* தியாகி கே. லட்சுமண நாயுடு அவர்களைப் பற்றிய கட்டுரை பாராட்டுக்குரியது. இது போன்ற கட்டுரைகள் அடிக்கடி வெளிவரட்டும்.

மதுரை — 7. எஸ். திருமலை.

* பல்லக்கு சிறுகதையில் சூழ்நிலைக்கேற்ப மனிதன் பரிமாணம் பெற்றுக் கொள்வான் என்பதை உணர்ந்து தங்கள் யுக்தியால் அச் சூழ்நிலையையும் தாங்களே உண்டாக்கி விட்டு, ஒரு குடும்பத்திற்குப் பொறுப்புணர்வும், விழிப்புணர்வும் ஏற்படச் செய்து, பாரம் சுமந்தே காலம் கழிக்க முடிவு செய்து விட்ட கன்னிப் பெண்ணுக்கு வாழ்வளிக்கவும் முன்வந்த சுரேஷ் குடும்பத்தினர் உயர்ந்து நிற்கிறார்கள்.

காட்டூர். எஸ். அருள்மொழி.

* உலகக் கோப்பைக் கால்பந்து ஒரு மாதத் திருவிழாத் தொகுப்புச் செய்திகள் சுவையாக இருந்தன.

வேலூர். கே. ஆர். தேவேந்திரன்.

* ஆளுநரின் பேட்டி சுருக்கமாக இருந்தாலும் 'சபாஷ்' போட வைத்தது.

நெல்லிக்குப்பம். தமிழ்ப்பரிதி.

* என்ன வாத்தியாரே! எந்த வாரமும் இல்லாமல் இவ்ரெண மூன்று சினிமா விமர்சனம்?

வேலூர். சி. சந்திரசேகரன்.

## உணருங்கள்!

* "அராஜகத்தில் ஈடுபட்டுக் குண்டர்களாக மாறும் தொண்டர்களே! உங்கள் செயலின் மூலம், மற்றவர் பிழைப்பில் மண் அள்ளிப் போடுவது மட்டுமல்லாமல், உங்கள் குடும்பத்தையும் மாய்த்துக் கொள்கிறீர்கள் என்பதை உணருங்கள். உணருங்கள். உணருங்கள்" என்று 'பந்த்' கதை மூலம் உணர்த்துகிறார் மதுமனோ.

திருச்சி — 21. கிஷோர்.

* உமா கல்யாணியின் "கல்வெட்டில் பெயர்" அரிய கதை. நம்மைப் போல் அல்லாது நம் சந்ததியாவது நன்றாக வாழ வேண்டும் என்ற ஒவ்வொரு தந்தையின் எண்ணமும் "முருகேசன் பிள்ளை" கதாபாத்திரத்தின் உருவத்தில் பிரதிபலித்தது.

தக்கோலம். மொ. சையத் அப்துல் காதர்.

* "திவாரி காலத்துக்குத் திரும்பி விட்டதா ம. வி?" என்ற தலைப்பின் கீழ், தாலாட்டுப் படம் பற்றி ஒரு ரசிகர் கூடவா கருத்து தெரிவிக்கவில்லை என எழுதியிருந்தீர்கள். படம் ஒளிபரப்பான மறுநாளே சென்னை தொலைக்காட்சிக்கு எங்களது விமர்சனத்தை எழுதி அனுப்பினோம். ஆனால் அவர்கள் நல்ல விமர்சனங்களை மட்டுமே படித்தார்கள்!

சாக்கோட்டை. பி. கே. கோபால்.

## உணருங்கள்!

# குங்குமம் அணிவதும்

'DOT BUSTERS' என்றோர் இயக்கம்... 'பொட்டு வைத்தவர்களை விரட்டியடிப் போம்!' என்னும் குறிக்கோளுடன் ஆரம் பிக்கப்பட்டிருக்கிறது! அமெரிக்காவின் எல்லா மாகாணங்களிலும் புற்றீசலாகக் கிளம்பிக் கொண்டிருக்கும் இந்த இயக்கம் தங்கள் நாட்டில் வந்து இடம் பிடித்துக் கொண்டு தங்களை விடச் சீரும் சிறப்புமாக வாழும் இந்தியர்களுக்கு எதிராக அமெரிக் கர்கள் நடத்துவது. நெற்றியில் நாம் அணி யும் குங்குமப் பொட்டைத்தான் 'dot' என்று அலட்சியமாகக் குறிப்பிடுகிறார்கள் இந்த அமெரிக்கர்கள். அந்தக் குங்குமத்தின் தெய்வீக பலம்தான் நம்மவரைக் காப்பாற்ற வேண்டும்!

* எலுமிச்சையையும் மஞ்சளையும் கலந்து...



அப்படி என்ன பலம் இருக்கிறது குங்கு மத்திற்கு...? என்று கேட்பீர்கள். மஹா விஷ்ணுவின் பாதாரவிந்தம்தான் அதன் தோற்றுவாய் என்கிற ஒரு சிறப்பே போதுமே.

''மஹாவிஷ்ணு வராக அவதாரம் எடுத்து, பூமிக்குள் சென்று, வெளிப்பட்டு, உடலை உதறியபோது சிவப்பு, மஞ்சள், வெள்ளை ஆகிய நிறங்களில் மண் உதிர்ந்த தாம். இதில் பாதத்திலிருந்து உதிர்ந்த சிவப்பு மண்ணைக் குறிப்பதுதான் குங்குமம் என்பது வைணவ சம்பிரதாய நம்பிக்கை'' என்கிறார் பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

தெய்வங்களுக்குப் பூஜை செய்யும்போது 'ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி' என்று மந்தி ரம் சொல்லி குங்குமம் இடுவதுண்டு. அம்பா ளுக்கோ குங்குமத்தால் அர்ச்சனையே செய்து அவள் பாதங்களிலிருந்து அதனை அள்ளிப் பிரசாதமாகப் பெற்று நெற்றியில் அணிந்து கொள்கிறோம். எல்லாக் கலைக

* ...நிழலில் உலர்த்தி...





* 'ஸ்ரீவித்யா' வெங்கட்ராமணி: 'முப்பத்தாறு வருடங்களாக...'



* ஊறிய மஞ்சளை அரைத்தல்



# ஒரு கலை

ஞக்கும் தெய்வீகப் பின்னணி உள்ள நமது நாட்டில், குங்குமம் அணிவதும் பக்தி கலந்த அழகுணர்ச்சியின் வெளிப்பாடுதான். அத னால்தான் இந்த ஸ்டிக்கர் பொட்டு யுகத்தி லும் குங்குமம் தயாரிப்பும் விற்பனையும் அடி படாமல் தழைக்கின்றன.

அர்ச்சனைக்காக வெகு நியமமாக மஞ்சள் குங்குமம் தயாரிக்கும் "ஸ்ரீவித்யா மஞ்சள் குங்குமம்" கடைக்கு அருகே செல் லும்போது மஞ்சளின் ரம்மியமான மணம் கமழ்கிறது. 'ஸ்ரீவித்யா'வைச் சேர்ந்த வேங் கடரமணி கூறுகிறார்:

"முப்பத்தாறு வருடங்களாக நாங்கள் சாஸ்திரப்படி குங்குமம் தயாரித்து வருகி றோம். கர்னூலில் 'துனி' என்னும் இடத்தில் மட்டுமே விளையும் 'செட்டி' மஞ்சளைக் குவிண்டாலுக்கு நாலாயிரம் ரூபாய் விலை கொடுத்து வாங்குகிறோம். உடைத்துப் பார்த்தால் அடர்ந்த சிவப்பாக, வித்தியாச மாக இருக்கும் இந்த மஞ்சள். இதை உடைத்து, மஞ்சளின் அளவில் ஐந்து சதவிகி தம் வெண்காரம், படிகாரம் ஆகியவை சேர்த்து, எலுமிச்சைச் சாறிலே ஊற வைப் போம். சாறு முழுவதையும் மஞ்சள் உறிஞ் சிய பிறகு அதை நிழலிலே உலர்த்துவோம். வெயிலில் உலர்த்தினால் நிறம் மட்டுப்படக் கூடும். உலர்ந்த மஞ்சளில், பன்னிரண்டு கிலோவுக்கு ஒரு கிலோ வீதம் நல்லெண் ணெய் சேர்த்து மிஷினில் அரைத்தால், நல்ல, சுத்தமான குங்குமம் கிடைக்கும். சாஸ் திரப்படி நெய் சேர்த்துத்தான் குங்குமம் தயா





* அரவிந்த் லாபரட்டரியில்...



* நைலான் குங்குமத்துக்கு நவீன கருவிகள்





* ஸ்ரீநிவாஸன்: நைலான் குங்குமம் — நிறைய விற்பனை.

ரிக்கணும். ஆனால் விலை கருதி, 'க்ருத சம் ஹானக; தில தைலக' என்று நெய்க்குச் சமமாகக் கூறப்படும் நல்லெண்ணெயைப் பயன்படுத்துகிறோம். இப்போது கிலோ அறுபது ரூபாய்க்கு விற்கும் குங்குமத்துக்கு இரண்டு மடங்கு விலை கொடுக்கத் தயாராய் உள்ளவர்களுக்கு மட்டுமே தூய நெய் கொண்டு தயாரித்துத் தர முடியும்!''

ஸ்ரீவித்யாவில் செய்வது போன்று நியமமாய்த் தயாரிக்கப்படும் குங்குமத்தைத் தனி நபர் நிர்வாகத்தில் உள்ள சில கோயில்களில்தான் வாங்குகிறார்கள். உதாரணமாக — பெசன்ட் நகர் அஷ்டலக்ஷ்மி, அண்ணா நகர் கங்கை அம்மன், சைதாப்பேட்டை கடும்பிடிச் சின்னம்மன் ஆகிய கோவில்கள்.

''மற்ற ஆலயங்களில் எல்லாம் 'டெண்டர்' முறையில்தான் குங்குமம் வாங்குகிறார்க்ள். கிலோ மூன்று ரூபாய்க்குக் கூடக் குங்குமம் தயார் செய்து தரச் சிலர் முன்வரும் போது நாங்கள் எப்படிப் போட்டிப் போட முடியும்?'' என்கிறார் வேங்கடரமணி.

நாளொன்றுக்கு 48 கிலோ குங்குமம் ஸ்ரீவித்யாவில் விற்பனையாகிறது. நவராத்திரி மற்றும் கோயில் திருவிழா நாட்களில் இதற்கு இரு மடங்கு வியாபாரம். சித்திரை, வைகாசிதான் 'டல்' பருவம்.

**கோ**வில்கள் தவிர, எம். எஸ். விஸ்வநாதன், டி. எம். சௌந்தர்ராஜன் போன்ற 'பெரிய பொட்டுப் பிரபலங்கள்' கூட ஸ்ரீவித்யாவின் வாடிக்கையாளர்கள் என்று கேள்விப்பட்டதும், தமது நெற்றியில் ஆறு பொட்டுக்கள் அணியும் குன்னக்குடி வைத்தியநாதன் நினைவு வர, அந்த ஆறு பொட்டுக்களில் நடுநாயகமாய் உள்ள குங்குமம் பற்றி அவரிடமே கேட்டோம்.

''தெய்வீகக் கலைகளில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு நெற்றிப் பொட்டு அத்தியாவசியம். குண்டலினி சக்தி வெளிப்படும் இடமல்லவா நடுநெற்றி. அம்பாளின் மறுவடிவமான குங்குமத்தை, அதுவும் மந்திரோச்சாடனங்களால் சக்தி பெற்ற குங்குமத்தை அங்கு அணிவதால் நிச்சயம் ஆன்ம பலம் கிடைக்கும்,'' என்றார் குன்னக்குடி.

* பெரிய பொட்டு பிரபலம் — குன்னக்குடி



**ந**ம் நாட்டில், கைத்தறித் துணிகளுக்கு மவுசு குன்றாத அதே நேரத்தில் மில் ஜவுளிகளும் பிரசித்தமாகிவிட்டது போல, மஞ்சள் குங்கும மகிமை போற்றப்பட்டாலும் 'நைலான் குங்குமம்' என அழைக்கப்படும் செயற்கைக் குங்குமமும் பிரபலமாக உள்ளது.

1958 — இல், சாந்து தயாரிப்புக்காக அரவிந்த் லாபரடரீஸ் நிறுவனத்தை வாங்கிய அதன் அதிபர் ஏ. வி. ஸ்ரீநிவாசன் அறுபதுகளின் இறுதியில் செயற்கைக் குங்குமத் தயாரிப்பிலும் ஈடுபட ஆரம்பித்தார். தயாரிப்பு முறையை விளக்கினார் ஸ்ரீநிவாசன்:

''முதல் படியாகத் தாவர **'base'** உம் அரசு அங்கீகாரம் பெற்ற செயற்கை வர்ணமும் **double cone blender** எனப்படும் கலவை இயந்திரத்தில் சுமார் மூன்று மணி நேரம் நன்றாகக் கலந்து அரைக்கப்படுகின்றன. பிறகு, அந்தக் கலவையை மேலும் மென்மையாக்க, **pulverising** இயந்திரத்தில் போட்டு அரைக்கிறோம். மிகச் சன்னமான குங்குமத் தூள் கிடைக்கிறது.''

அரவிந்த் லாபரடரிக்குள் நுழைந்து நோட்டம் விட்டால் கனவுலகம் போல் இருக்கிறது! மின் விசிறி, பணிப் பெண்களின் பாதுகாப்பு உடை என்று ஓர் இடம் விடாமல் இளஞ்சிவப்புப் படலம்! இதனால் எந்தவிதமான ஒவ்வாமையோ உடல் பாதிப்போ ஏற்படுவதில்லை என்று அங்கு பணியாற்றும் பெண்கள் உறுதியாகச் சொல்கிறார்கள்.

**பூ**ஜையில் பயன்படுத்தப்பட்டு வந்த குங்குமம் பெண்களுக்கு அலங்காரப் பொருளாக ஆனது எப்போது?

''சங்க இலக்கியங்களிலேயே பெண்கள் 'தொய்யில்' எழுதிக் கொண்டதற்கான சான்றுகள் உள்ளன என்கிறார் புலவர் கீரன். அக்காலப் பெண்கள் நெற்றியில் மட்டும் அல்லாது, தோள்களிலும் பொட்டிட்டு அழகு செய்து கொண்டார்கள்.

''குங்குமத்தைப் புருவங்களுக்கு மேலே நடு நெற்றியில் இட்டுக் கொள்ள வேண்டும் என்பது சாஸ்திரம். 'புத்திக் கமலம்' என்றும் 'ஆக்ஞா சக்கரம்' என்றும் அழைக்கப்படும் நடு நெற்றியில் திலகம் அணிந்து கொள்வதால் நல்ல சிந்தனைகள் தூண்டிவிடப்படும்'' என்கிறார் பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

நேராக இடப்படும் ஊர்த்துவ திலகம் திருநீறு என்ற குறுக்கு விபூதி, பாகல் விதை வடிவப் பொட்டு, வட்ட வடிவத் திலகம் என்று பல வகைத் திலகங்கள் சாஸ்திரப்படி விவரிக்கப்பட்டுள்ளன. நெற்றிக்கு அணிவது நியமங்களுக்கு உட்பட்ட கலையாகவே இருந்து வந்திருக்கிறது.

**ம**ணமான பெண்கள் மட்டுமே உச்சி வகிட்டில் குங்குமம் இட்டுக் கொள்ளலாம் என்ற சாஸ்திரம் ஃபாஷனுக்காக வளைந்து

## அருள்வாக்கு



தினமும் தூங்கப் போகுமுன்பு இன்று ஜன சமுதாயத்துக்கு நாம் ஏதாவது கைங்கர்யம் பண்ணினோமா என்று கேட்டுக் கொள்ள வேண்டும். ஈச்வரனைப் பற்றிப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று தேவாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த மாதிரி நாம் பரோபகாரம் பண்ணாமலே ஒரு நாள் போயிற்று என்றால், அது நாம் பிறவா நாளே.

நாம் எத்தனை சின்னவர்களாக இருந்தாலும் நம்மாலும் முடியக் கூடிய சின்னத் தொண்டு இல்லாமலில்லை. இப்படி அவரவரும் தனியாகவோ, ஸங்கமாகச் சேர்ந்தோ ஏதாவது பொது நலக் கைங்கர்யம் பண்ணியே ஆக வேண்டும். தண்ணீரில்லாத ஊரில் ஒரு பத்து பேர் சேர்ந்து கிணறு வெட்டுவது; ஏதோ ஒரு பிள்ளையார் கோயில் மதில் இடிந்திருந்தால் அதை நாலு பேராகச் சேர்ந்து கட்டுவது; பூஜை நின்று போன ஒரு கிராமக் கோயிலில் ஒரு காலப் பூஜைக்காவது நாலு பேரை யாசித்து மூலதனம் சேகரித்து வைப்பது; பசுக்கள் சொறிந்து கொள்வதற்கு ஒரு கல்லேனும் நாட்டுவது; நாம் படித்த நல்ல விஷயங்களை நாலு பேருக்குச் சொல்வது, எழுதுவது; இரண்டு ச்லோகமாவது பாசுரமாவது நாமாவளியாவது பாடி நாலு பேர் மனதில் பகவானைப் பற்றிய நினைப்பை உண்டாக்குவது; குப்பை கூளங்களைப் பெருக்குவது — இந்த மாதிரி ஏதாவது தொண்டு அன்றன்றும் செய்ய வேண்டும். ஓசைப்படாமல் செய்ய வேண்டும் என்பது முக்யம்.

குடும்பக் கடமைகளை விட்டு விட்டு ஸோஷல் ஸர்வீஸ் என்று கிளம்ப வேண்டியதில்லை. அதையும் விடாமலே இதுவும் கடமை என்ற உணர்வோடு சேர்த்துக் கொண்டு செய்ய வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

கொடுத்திருக்கிறது. தற்காலப் பெண்கள் ஜீன்ஸில் வளைய வந்தாலும், விசேஷ தினங்களில் பாரம்பரிய உடை தரித்து வகிட்டிலும் குங்குமம் இட்டுக் கொள்கிறார்கள்.

குங்குமம், சுமங்கலிகளுக்கு மட்டுமே உரியதாகத் தற்காலச் சூழலில் ஏற்க முடிவதில்லை. சுஹாசினியின் 'பெண்' ம. வி. தொடரின் ஒரு பகுதியில் கணவனை இழந்த பெண்ணுக்குக் கோவில் குருக்கள் தெரிந்தே குங்குமப் பிரசாதம் தருவதாக ஒரு காட்சி. அந்தப் பெண்ணின் பாத்திரத்தை ஏற்று நடித்த ராதிகா, 'இதை என்னோட நிறுத்திடாதீங்க' என்று நெகிழ்ந்து போய்க் கூறுகிறார். 'கதையோடு முழுவதுமாய்ப் பொருந்தாது போல் தோன்றிய போதிலும் அக்காட்சி, ஒரு கண நேர மெய்சிலிர்ப்பை ஏற்படுத்தவே செய்தது.

**கலப்படம்**தான் எங்கள் கொள்கை என்று தொழிலாற்றும் சில ஏமாற்று வியாபாரிகள் குங்குமம் விஷயத்திலும் உள்ளார்கள். பாத்திரம் துலக்கும் பவுடர்கள் தயாரிக்க உபயோகிக்கப்படும் களிமண்ணில் மண்ணெண்ணெய் மற்றும் வர்ணங்களைச் சேர்ப்பது; மைதாவில் புடைவைச் சாயம் கலந்து கூறு கட்டி விற்பது என்று ஏமாற்று வியாபாரம் ஒருபுறம். மற்றொரு பக்கத்தில் பிரபல தயாரிப்புக்களைப் போலவே போலிகளைப் 'பேக்' செய்து விற்பது... இது போன்ற போலித் தயாரிப்புக்கள்தான் நெற்றியில் தழும்பு ஏற்படவும் ஒவ்வாமையினால் அரிப்பு ஏற்படவும் காரணமாயிருக்கின்றன.

மருந்து மற்றும் அழகுச் சாதனங்கள் கட்டுப்பாட்டுத் துறையின் அதிகாரி ஒருவரைச் சந்தித்து இப்பிரச்னை குறித்துக் கேட்டோம்.

"உடலில் நேரடியாகப் பயன்படுத்தும் சாதனங்கள்தான் அழகு சாதனங்கள் என்று ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இது போலி வியாபாரிகளுக்குச் சௌகரியமாக இருக்கிறது. கையும் மெய்யுமாகப் பிடிபட்டால் கூட, "நாங்கள் ரங்கோலி (வண்ணக் கோலம்) பொடிதான் விற்கிறோம்; எங்கள் குங்குமம் வாசல் நிலைப்படியில் இடுவதற்கெனத் தயாரித்ததுதான்; அதை வாங்கி வாடிக்கையாளர்கள் நெற்றியில் இட்டுக் கொண்டால் நாங்கள் என்ன செய்ய முடியும்?" என்று வாதாடுகிறார்கள். பொது மக்கள்தான் முன்னெச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

**— நிர்மலா சக்கரவர்த்தி**

அட்டை வண்ணப்படம் மற்றும் புகைப் படங்கள்: **ரமணன்**

அட்டையில்: **நந்தினி**



* அரவிந்தன்: கையகலக் கதை

# நோக்கம் சரி, அதற்காக இப்படியா?



ராஜ் கபூர்: மெருகு குறையாமல்...

"அறிவு ஒரு கருவி" என்று முதல் முதலாகக் கண்டறிந்து அதைக் குறள்வடிவில் கூறியவன் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய தமிழன் என்று டி.வி. பேட்டியில் பெருமிதத்தோடு எடுத்துச் சொன்னார் புதுவைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் வெங்கடசுப்பிரமணியம். அதன் பிறகு, இந்த நூற்றாண்டில்தான் மேல் நாட்டு அறிஞர் ஒருவர் அந்தக் கருத்தை வெளியிட்டார் என்றும் விவரித்தார்.

புதுவைப் பல்கலைக் கழகத்தில் புதிதாகத் தொடங்கப்பட்டுள்ள நாடகத்துறை முதியோர் கல்வித் திட்டத்தை வலுப்படுத்தும் நோக்கத்தோடு நடத்தும் தெரு நாடகங்களைப் பற்றியும் குறிப்பிட்டார். பலன்? நாடகம் நடந்த மறுநாளே நாற்பது ஐம்பது பேர் முதியோர் கல்வி பெற முன் வந்தார்களாம்.

கையகலக் கதை. ஒரே பக்கத்தில் அடங்கிவிடக் கூடிய வசனங்கள். பாடல்கள்? மூச்..... பேசக் கூடாது. தந்தையின் திடீர் மரணம். பிரிந்து போய்விடும் காதலி. வானத்தில் பறக்க விரும்பிய நண்பருக்கு ஏற்பட்ட கொடுமையான தோல்வி..... அவலம் நிறைந்த இந்த வாழ்க்கை கொண்டு தரும் அழுத்தங்கள் ஒருவனது மனநிலையைப் பாதித்து விடக் கடைசியில் அவனை மனநோய் மருத்துவமனைக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிடுகிறாள் அவன் தாய். அரவிந்தனின் 'போக்கு—வெயில்' படத்தின் (மலையாளம்) கதை தான் இது!

அவார்ட் வாங்கிய படங்களைத் தொலைக் காட்சியில் காண்பிக்கும் நோக்கம் சரி. அதற்காக இப்படியா? Entertainment value சுத்தமாகக் கிடையாது! அந்தப் படம் ஏற்படுத்திய பாதிப்பு நீடித்ததாலோ என்னவோ, அன்று மாலை பார்த்த 'நம்ம ஊர் நாயகன்' படம் படுசுகமாக இருந்தது!

'தெரியுமா உங்களுக்கு?' என்று கேட்டுச் சில செய்திகளைக் காண்பிக்கிறார்கள் 'சபாஷ்'! போட வேண்டிய அம்சம் இது. சுவையாக ஒன்று:

மனிதன் முதல் முதல் கண்டு பிடித்த கருவி பூட்டும் சாவியும்தான். சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அதனைக் கண்டு பிடித்தவர்கள் எகிப்தியர்கள். அப்போதெல்லாம் அவை மரத்தினால்தான் செய்யப்பட்டன. பூட்டின் அளவே மிகப் பெரிதாக இருக்குமாம். சாவியின் நீளம் இரண்டடியிலிருந்து நாலடி வரை. ஒரு கயிற்றில் கட்டித் தொங்கவிடுவார்கள். வெளியில் போகும் போது வீட்டைப் பூட்டி விட்டுச் சாவியைத் தோளில் சுமந்து செல்வார்கள். அதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே உலோகத்தாலான பூட்டு உருவெடுத்ததாம். உருவாக்கியவர்கள் — ரோமானியர்கள்.

ராஜ்கபூரின் 'ஸ்ரீ 420' உருவாகி முப்பது ஆண்டுகளுக்கு மேல் இருக்கும். அண்மையில் ஒரு சனிக்கிழமை மாலையில் டி.வி.யில் பார்த்த போது, ஒரு புதுப்படம் பார்க்கும் உணர்வுதான் ஏற்பட்டது. கதை யம்சம், இசை, இயக்கம், நடிப்பு எல்லாமே அட்டகாசம். இன்றையப் படங்களுடன் ஒப்பு நோக்கிய போது பெருமூச்சுதான் வந்தது.

மீண்டும் பொன் மொழிகளும் அறிவுரைகளும் எழுதப்பட்டுள்ள அட்டைகள் இடம் பெறத் தொடங்கியுள்ளன. வரவேற்க வேண்டிய ஒரு மாற்றம் — சந்திப் பிழைகள் இடம் பெறுவதில்லை.

— கிச்சாமி.

# நரம்பு மண்டலமும் நாளமில்லாச் சுரப்பிகளும்

ஆசனம் செய்வதால் இளமை, சுறுசுறுப்பு, ஆரோக்கியம் எல்லாம் எப்படி உண்டாகின்றன? இவை முதுகெலும்பின் தன்மையைப் பொருத்திருக்கின்றன. எனவேதான் எந்த ஆசனத்தை எடுத்துக் கொண்டாலும் முதுகெலும்பின் இளமைக்குச் சாதகமான பயிற்சியாகவே அது அமைந்திருக்கக் காணலாம். முதுகெலும்பு என்னும்போது எலும்பை மட்டும் குறிப்பிடவில்லை. அதனுள்ளே ஓடும் நரம்புத் தண்டையும் சேர்த்தே குறிப்பிடுகிறோம். இந்த நரம்புத் தண்டு மூளையுடன் தொடர்புடையது.

மூளையிலிருந்து நரம்புக் கூட்டங்கள் கழுத்தின் பின்புறம் இருக்கும் முதுகுத் தண்டின் மோதிரம் போன்றுள்ள துவாரங்கள் வழியாகக் கீழிறங்கி வருகின்றன. அப்படி வரும் போது அந்தந்த பாகங்களுடன் சம்பந்தப்பட்ட நரம்புகள் முதுகுத் தண்டின் பக்கச் சந்து வழியாக அந்தந்த இடங்களில் பிரிகின்றன. அந்த நரம்புகளிலிருந்து மீண்டும் பல பிரிவுகள் மரக் கிளைகளைப் போல் பிரிந்து சரீரம் முழுவதும் பரவுகின்றன. இந்த நரம்புக்கூட்டங்களெல்லாம் சரியாக இருக்கவும் இயங்கவும் முதுகுத் தண்டின் வழியாகச் செல்லும் பெரிய நரம்புக் கூட்டம் நல்ல நிலையில் இருக்க வேண்டும்.

சிலரைப் பார்த்தால் ஒடிசலாய் மெலிந்து இருப்பார்கள். இள வயதினராயும் இருப்பார்கள். இவர்களுக்குச் சுலபமாக ஆசனம் செய்ய வரும் என்று எண்ணுவோம். ஆனால் செய்து பார்த்தால் தெரியும். முதுகெலும்பு வளையாமல் விறகுக் கட்டை மாதிரி நிற்கும்! பஸ்கி மோத்தானாசனத்தில் கால் கட்டை விரலைத் தொடக் கூட முடியாது. வேறு சிலர் பார்வைக்குச் சற்று கனத்து இருப்பார்கள். அவர்கள் கஷ்டமில்லாமல் முழங்கால் மேலேயே படுத்து விடுவார்கள்! ஆகவே பார்வையினால் யாரையும் நிதானித்து விடக் கூடாது. அவரவரின் முதுகெலும்புத் தன்மையைப் பொருத்துத் தான் ஆசனங்கள் பழக வரும். அதைரியமடையாமல் விடா முயற்சியுடன் மெல்ல மெல்ல உடலை நம் வசப்படுத்த வேண்டும்.



மானிட உடலை உழைத்து உரமேற்றி வைத்துக் கொள்ள வேண்டும் என்பது இயற்கையின் கட்டளை. ஆனால் மனிதன் நாகரிக முன்னேற்றத்தில் பல கருவிகளைக் கண்டுபிடித்துத் தன் உடல் உழைப்பைக் குறைத்துக் கொண்டு விட்டான். விதைக்க இயந்திரம், நீர் பாய்ச்ச இயந்திரம், அறுவடைக்கு இயந்திரம், மாவரைக்க இயந்திரம், புல் வெட்ட இயந்திரம், வீடு பெருக்க இயந்திரம் என்று எல்லாவற்றுக்கும் இயந்திரங்கள் வந்து விட்டன. ஸ்விட்சுப் போடுவதுதான் வேலை என்றாகி விடுகிறது. இதனால்தான் உடல் துருப்பிடித்து, நோய் நொடிகளின் இருப்பிடமாகவும் ஆகி விடுகிறது. இதற்கெல்லாம் மாற்று யோகாசனங்கள்தான். இன்றைய நாகரிக யுகத்தில் ஆரோக்கிய ரகசியம் ஆசனங்களே.

பஸ்கிமோத்தானாசனத்தில் முதுகெலும்பு முன்னுக்கு நன்றாக வளைக்கப்படுவதால் அதன் ஊடே செல்லும் நரம்புத் தண்டும் நன்றாக உருவி விடப்படுகிறது. எனவே என்றும் சுறுசுறுப்பாக இளமையோடு இருக்க முடியும். ஆயுள் விருத்தியாகும். வியாதிகள் அணுகாது. இடுப்பு



வலுவடையும். இடுப்பு வலி, முதுகு வலி முதலியன தோன்றாது. வயிற்று அவயவங்கள் நன்றாய் அழுக்கப்படுவதால் அவை 'மஸாஜ்' செய்து விடப்பட்டது போல் புத்துணர்ச்சி பெற்றுத் தங்கள் பணிகளைச் சரிவரச் செய்யும்.

பெண்களுக்கு இந்த ஆசனம் மிகவும் முக்கியமானது. மாதவிடாய் சம்பந்தமான நோய்கள் வராது. கருப்பப் பையும் நன்றாக அமுக்கி விடப்படுவதால் அது தொடர்பான நோய்கள் நெருங்காது. சுகப் பிரசவம் உண்டாகும். ஆரோக்கியமான குழந்தைகள் பிறக்கும். குறைப் பிரசவம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

ஆனால் சென்ற இதழிலேயே கூறியது போல் கருப்பந்தரித்த பெண்கள் புதிதாக ஆசனம் பழகக் கூடாது. வழக்கமாக ஆசனம் பழகி வரும் பெண்கள் கருவுற்று இரண்டு மாதங்கள் வரை பஸ்கிமோத்தாளாசனம் செய்யலாம்; அதன்பின் வேண்டாம்.

'**ப**ஸ்கிமோத்தானாசனத்தில் முதுகு எலும்புக்கும் அதனூடே செல்லும் முதுகுத் தண்டுக்கும் எப்படி பயிற்சி ஏற்படுகிறது என்பதை விவரித்தோம். இதுபோன்ற பயிற்சியை அதற்கு அளிக்கும் மற்றொரு ஆசனம் ஹலாசனம் ஆகும். ஹலாசனத்தில் முதுகு எலும்புகள் எல்லாம் படிப்படியாக வளைவதுடன் அதனூடே செல்லும் நரம்புகளை இழுத்து வளைத்துச் சுறுசுறுப்பேற்றுகிறது. இந்த ஆசனங்களைச் செய்து வருகிறவர்களுக்கு நரம்புத் தளர்ச்சி அல்லது பலவீனம் என்பது ஏற்படவே செய்யாது.

அற்புதமான ஹலாசனம் பற்றிக் கூறு முன்னர், நமது உடலில் உள்ள சில சுரப்பிகளைப் பற்றியும் கூற வேண்டும். இந்தச் சுரப்பிகள் எவ்வளவு முக்கியமானவை என்பதைப் புரிந்து கொண்டால்தான் இவற்றை ஊக்குவிக்கும் யோகாசனங்கள் எவ்வளவு சிறப்புமிக்கவை என்பதையும் நன்றாக உணர முடியும்.

நமது உடலில் ஏராளமான சுரப்பிகள் உள்ளன. உணவைக் கண்டதுமே உமிழ் நீர் சுரக்கிறது. வயிற்றில் ஜீரணத்துக்கு உதவும் அமிலமும் மற்றும் என்ஸைம்களும் சுரக்கின்றன. தவிர, கல்லீரல் பித்த நீரைச் சுரந்து பித்த நீர்ப் பையை நிரப்புகிறது. இப்படி பலவிதசுரப்பிகள். ஒவ்வொன்றும் சுரக்கும் திரவத்துக்கு ஒரு குறிப்பிட்ட வேலை இருக்கிறது. இவை சுரக்கும் திரவங்களை எடுத்துச் செல்ல நாளங்களும் உண்டு.

ஆனால் நாளமில்லாச் சுரப்பிகள் என்பதாகவும் சில உள்ளன. இவை அற்புதமான பணியாற்றுகின்றன. இவை சுரக்கும் திரவங்களை எடுத்துப்போக நாளங்கள் இல்லை. இவை ஹார்மோன்களைச் சுரக்கின்றன அவை நேரடியாக ரத்தத்தில் கலந்து விடுகின்றன.

'**ஹா**ர்மோன்' என்பது கிரேக்கச் சொல். 'நான் கிளறி விடுகிறேன்' என்பது இதன் பொருள். இவை கிரியா ஊக்கிகள் போல் செயல்பட்டுப் பல காரியங்களுக்கு உதவுகின்றன. உதாரணமாக தைராய்ட் சுரப்பிக்கும் உடலின் வளர்ச்சிக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. இந்தத் தைராய்ட் சுரப்பி கழுத்தின் இரு புறமும் குரல் வளையையொட்டி அமைந்திருக்கிறது. இது சரியாக இயங்கா விட்டால் உடல் வளர்ச்சி குன்றி, குள்ளர்களாக இருப்பார்கள்.

மற்றொரு ஜதை சுரப்பி, இரண்டு சிறுநீரகங்களின் மீதும் தொப்பி போட்டது போல் உட்கார்ந்திருக்கின்றன. இவற்றுக்கு அட்ரீனல் சுரப்பி என்று பெயர். இவை அட்ரினலின் என்ற திரவத்தை ரத்தத்துடன் கலக்கச் செய்கின்றன. இந்த அட்ரினலினுக்கு இதயத் துடிப்பையும் நுரையீரலையும் ஊக்குவிக்கும் சக்தி உண்டு. நாம் எப்போதாவது பயப்படும் போது இதயத் துடிப்பு அதிகரிக்கிறதல்லவா? அதற்கு இந்த அட்ரினலின்தான் காரணம். இவையெல்லாம் இயற்கையாக நமக்கு அமைந்துள்ள பாதுகாப்புத் திறன்கள்.

இந்த நாளமில்லாச் சுரப்பிகளையெல்லாம் கட்டுப்படுத்தும், வேலை வாங்கும் மற்றொரு சுரப்பி இருக்கிறது. அதற்குப் பிட்யூட்டரி என்று பெயர். இதன் முக்கியத்துவம் கருதி இதனை ராஜகோளம் என்பர். ஆனால் இது சிறிய கோலி அளவில்தான் மூளைப் பகுதியில் அமைந்திருக்கிறது. இது சரியாக இயங்கவில்லையெனில் மற்ற நாளமில்லாச் சுரப்பிகளும் பழுதுபட்டுப் போகும். இது தன் பணியை மற்ற கோளங்களை உத்தரவிட்டுத்தான் நிறைவேற்றிக் கொள்கிறது.

பிட்யூட்டரி ராஜா என்றால் தைராய்டு மந்திரி; அதன் அருகே உள்ள பரா தைராய்டுகள் உப மந்திரி!

நாளமில்லாச் சுரப்பிகள் ஆண், பெண் பீஜக் கோளங்களின் இயக்கத்தையும் சரிவர நிர்வகிக்கின்றன.

இப்படிப்பட்ட சுரப்பிகள் நன்றாகப் பணியாற்றி, ஹார்மோன்கள் சரியாக ரத்தத்தில் கலந்தால்தான் மனிதன் ஆரோக்கியமாக வாழ முடியும். உடல் உறுப்புக்களும் ஒழுங்காக வேலை செய்யும். ஹார்மோன்கள் குறைந்தாலோ, அதிகப்பட்டாலோ அது அதற்கு ஏற்ப உடல் கோளாறுகள் ஏற்படும்.

இந்த நாளமில்லாச் சுரப்பிகளை நல்ல நிலையில் வைத்திருக்கும் யோகாசனங்களில் முக்கியமானது ஹலாசனம். அது பற்றி விவரமாக அடுத்த வாரம் பார்க்கலாம்.

(தொடரும்)

●● தக்காளிப் பழம் அழகாயல், ஆனால் கொள கொளவென ஆகிவிட்டால், பெரிய பாத்திரத்தில் பாதிக்குக் குளிர்ந்த தண்ணீரை நிரப்பி கோஸ் உப்புப் போட்டு, இரவு முழுக்கத் தக்காளிகளை அதில் போட்டு வைத்திருங்கள். காலையில் தக்காளி கனகனவென்று கெட்டிப்பட்டு இருக்கும்.

சென்ற வாரம் ரீகல் டாக்கீஸுக்குப் படம் பார்க்கச் சென்றோம். கமல் நடித்த "மூன்றாம் பிறை". திடீரென்று பயங்கரக் கூச்சல். விதவித மான ஓசைகள். திட்டமிட்டு ஒரு கோஷ்டியினர் இதைச் செய்தனர். இன்னொரு கோஷ்டியினர் இதை அடக்கப் பார்த்தனர். என்னவென்று விசாரித்தால் கூச்சல் எழுப்பியவர்கள் ரஜினி ரசிகர்களாம். அடக்குவதற்குப் பார்த்தவர்கள் கமல் ரசிகர்களாம்! தேசம் போகும் திசையை எண்ணி வருந்துவதைத் தவிர வேறு என்ன செய்ய?

— கு. பி. ரவிச்சந்திரன்.





நடிகை: "ஜோஸ்யரே... இந்த ஜாதகக் காரரைக் கல்யாணம் பண்ணிக்கலா மான்னு பார்த்துச் சொல்லுங்க."

ஜோஸ்யர்: "வேண்டாம்மா... இந்த ஜாதகத்துல விவாகரத்துக்கான அறி குறியே இல்லை; உங்களுக்கு ஒத்து வராது!"

— வி. ரேவதி

"டாக்டர் வீட்டுக் கல்யாணமா இருக் கலாம்; அதுக்காக இப்படியா?"

"என்ன?"

"பன்னீருக்குப் பதிலா டெட்டாலைத் தெளிக்கிறாங்க!"

— இளை. அ. கதிர்வேல்.





"போன வாரம் காலில் அடிபட்டுட்ட தாமே... டாக்டர் என்ன சொன்னார்?"

"கொஞ்ச நாளைக்குக் கட்சி எதுவும் தாவக் கூடாதுன்னுட்டார்!"

— இளை. அ. கதிர்வேல்

பாங்க் மேனேஜர்: "உங்களுக்கு எந்த மாதிரி லோன் வேணும்னு சொல் லுங்க... சும்மா மொட்டையா கேட்டா எப்படி?"

வந்தவர்: "அரசாங்கத்துல தள்ளுபடி பண்ற மாதிரி லோனாக் குடுங்க எசமான்!"

— வி. ரேவதி.



“எக்ஸ்கியூஸ் மீ மேடம்...'' — குரல் கேட்டு, ஜன்னல் பக்கமிருந்து தலை திருப்பினேன்.

மலிவான பச்சை வண்ணத்தில் கூலிங் கிளாஸ். குறுக்கில் கோடு போட்ட அடிக்க வரும் நிற டீ ஷர்ட்டுடன் அந்த இளைஞன்.

''யெஸ்?''

''கொஞ்சம் இப்படி வரீங்களா...? ஒரு சின்ன உதவி...''

தோற்றத்துக்குப் பொருந்தாத மெய்யான



# இருட்டிலிருந்து இருட்டுக்கு...

கவலை அந்த இளைஞனின் குரலில் தொனிக்க, எழுந்து அவனைப் பின் தொடர்ந்து பஸ்ஸை விட்டு இறங்கினேன்.

தயக்கத்துடன் ஒரு கொத்தாகத் தள்ளி நின்று கொண்டிருந்த அவன் சகாக்கள் வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

ஒரு வினாடிக்கு வயிற்றைக் கவ்விய பயம்,



என்னை அழைத்த அந்த இளைஞன் தயக்கத்துடன் பேச ஆரம்பித்ததும் மறைந்தது.

''உங்களுக்கு முன் ஸீட்லே இரண்டு குழந்தைங்க உட்கார்ந்திருக்காங்களே மேடம்... அவங்களைக் கொஞ்சம் கடலூர்ல இறக்கி விட்டுடறீங்களா? நீங்க சிதம்பரத் துலதானே இறங்கப் போறீங்க... டிக்கெட் எடுக்கும் போது பார்த்தோம்...''

''ஏன் அவங்களைத் தனியா அனுப்பறீங்க? வண்டி கடலூர் போகறதுக்குள்ளே நல்லா இருட்டிடும். அங்க பஸ் ஸ்டாண்டுக்கு யாராவது வருவாங்களா?''

சில வினாடிகள் அந்த நாலு இளைஞர்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு ஒருவன் உடைத்துச் சொல்லி விட்டான்.

''எங்களுக்கும் இந்தப் புள்ளைங்களுக்கும் சம்பந்தம் கிடையாதுங்க. இதுங்களை அப்பன்காரன் குடி வெறியில் தினம் மொத்தறதைப் பார்க்கச் சகிக்கலை. இதுங்க அம்மா, புருஷன் குடிச்சுட்டு ஆடறது சகிக்காம கடலூருக்குப் போயிடுச்சு. இன்னிக்கு இந்தப் புள்ளைங்களை அடிச்சுத் தெருச் சாக்கடையில் தள்ளப் பார்த்தான் அப்பன்காரன். எதிர்ப்பக்க லாட்ஜுல குடியிருக்கிற நாங்க இதுங்களைத் தெருவிலேர்ந்து இட்டாந்தோம். பொம்பளைப் புள்ளைங்க — நாங்க இருக்கிறது லாட்ஜு... அதான் வேற வழி தெரியாம பஸ் ஏத்தி விட்டுருக்கோம்... நீங்க தயவு செஞ்சு இதுங்களை கடலூர்ல இறக்கி விட்டுடுங்க... அதுங்க வீடு தேடிப் போய்ச் சேர்ந்துடும்.''

''ஏன்? நீங்க யாராவது கடலூர்ல வீட்டு வரைக்கும் கொண்டு விடக் கூடாதா?'' — நாக்கு நுனிக்கு வந்து விட்ட கேள்வியை உள்ளிழுத்துக் கொண்டேன். அந்த இளைஞர்கள் அவரவர் மணி பர்ஸுகளைக் கவிழ்த்து, சில்லறை சேர்த்துக் கொண்டிருந்தார்கள்!

ஒருவன் கை நிறையச் சில்லறையை எடுத்துப் போய் பிஸ்கட் பொட்டலம் வாங்கி வந்தான். ''டிக்கெட் நாங்க எடுத்துக் குடுத்துட்டோங்க. நீங்க கொஞ்சம் பார்த்து இறக்கி விட்டாப் போதும்'' என்று கூறி விட்டு பிஸ்கட் பொட்டலத்தை ஜன்னல் வழியே குழந்தைகளிடம் தந்தான்.

தோற்றத்தைக் கொண்டு இளைஞர்களைத் தவறாக எடை போட்டதற்காக என்னை நானே சபித்துக் கொண்டேன். முதல் முறையாகக் குழந்தைகளின் முகங்களைக் கவனத்துடன் பார்த்தேன். கசங்கிய தாமரை இதழ்களைப் போல் மென்மை குலைந்து இருந்தார்கள். வெளிறிய கன்னங்களில் கண்ணீர்க் கரை. பிஸ்கட் பொட்டலத்தை வாங்க ஜன்னல் வழியே நீண்ட சின்னக் கை நீலம் பரித்துப் போயிருந்தது.

''நான் பார்த்து வீடு வரைக்கும் கொண்டு விட்டுடறேன். வேற வண்டி புடிச்சு சிதம்பரம் போய்க்கறேன்'' — பரிதாபம் உந்தியதில் பேசி விட்டேன். உள்ளூர

## "கலையைக் காப்பாற்றுங்கள்!"



திருவனந்தபுரத்தில் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணவின் 'சந்திரகிரி' என்ற நகைச்சுவை நாடகம் நடந்தது. மேடையில் சந்திரகிரியாக என். எஸ். கே. அரசவையில் வீற்றிருக்கும் நிலையில், சிறுவர் இருவர் பெண் வேடம் தாங்கி நடனம் ஆடினர். நாட்டியம் சரியாக அமையவில்லை. பாட்டு ஒரு பக்கம் ஆட்டம் ஒரு பக்கம்.

கலைவாணர் நிலைமையை உணர்ந்து சடக்கென்று சிம்மாசனத்திலிருந்து இறங்கி, "மந்திரி!" என்று அமைச்சரை அழைத்தார். "இந்நங்கையர் நாட்டியமாடியது போதும்; அவர்கள் கேட்கும் பரிசைக் கொடுத்தனுப்பி மிச்சமுள்ள கலையைக் காப்பாற்றுங்கள்!" என்றார்.

— எஸ். முகம்மது யூசுப்.

---

உதறல். நான் ஊர் போய்ச் சேர இரண்டு மூன்று மணி நேரம் தாமதமாகும். அப்பா கோபத்தில் குதிப்பார்; அம்மா காரணம் கேட்டறிந்து 'சமூக சேவையா' என்று சாடுவாள்...

"ரொம்ப தாங்க்ஸ்ங்க. இப்ப எங்களுக்குக் கவலை விட்டது" என்று அந்த இளைஞர் கும்பல் மறுபரிசீலனைக்கு வாய்ப்புத் தராமல் முற்றுப்புள்ளி வைத்து விட்டது.

பஸ் புறப்பட்டதும் இரண்டு சிறுமிகளையும் அழைத்து என் பக்கத்து ஜன்னல் சீட்டில் உட்கார்த்தி வைத்துக்கொண்டேன். கையில் பிஸ்கட் பாக்கெட்டை இறுக்கிப் பிடித்தபடி அகன்ற கண்களில் பயம் ததும்ப உட்கார்ந்திருந்தாள் சின்னவள். பெரியவள் பயத்தை வெளிக்காட்டாமல் சின்னவளை அணைத்தபடி... இருவர் தலையும் எண்ணெய் கண்டு ஒரு வாரம் ஆகியிருக்கும். கை கால்களில் சிராய்ப்புக்கள், சிரங்குகள்...

"உன் பேர் என்னம்மா...?"

"நான் உஷா என் தங்கை பேரு லதா."

"ஸ்கூல்லாம் லீவ் விட்டாச்சா?"

"ம்..."

"வீடு எங்க...?"

"தேனாம்பேட்டை."

"யாரெல்லாம் இருக்காங்க அங்கே?"

"தாத்தா பாட்டி இருக்காங்க. சித்தப்பா, சித்தி..... அப்பா...."

அப்பா, அந்தப் பட்டியலில் கடைசி இடம்தான் பெற்றார்.

"அம்மா...?" என்றேன் நான்.

"அவங்கதான் எங்களை எக்ஸாம் முடிஞ்சதும் கூட்டிக்கிறேன்னு சொல்லிட்டுக் கடலூர் போய்ட்டாங்க. அவங்க வர்றதுக்குள்ள..."

— இனிமேல் பேசினால் தைரியப் போர்வை விலகி விடும் என்ற பயத்தில் அவள் நிறுத்தி விட்டாள்.

செ‌ன்னை எல்லை தாண்டியதும் லதா, அக்கா மீது சாய்ந்தபடி தூங்கிப்போனாள். உஷாவிடம் பள்ளிக்கூடம் பற்றிக் கேட்டேன். உற்சாகமாகப் பேசினாள். அடுத்த வகுப்பைப் பற்றி ஆர்வத்துடன் சொன்னாள்.

திண்டிவனத்தில் பஸ் நின்ற போது ஓரளவு பயம் விட்டுப் போய் நம்பிக்கை பிறந்திருந்தது உஷாவுக்கு. தங்கையை எழுப்பினாள். இருவரையும் டிபன் சாப்பிட அழைத்துச் சென்றேன்.

"காலைல என்ன சாப்பிட்டீங்க" என்றேன் பூரி, பொங்கலுக்குச் சொல்லி விட்டு...

இரு சிறுமிகளும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். உஷாவுடைய கண்கள் அனுப்பிய எச்சரிக்கை சமிக்ஞையை மீறி லதா உடைத்துச் சொல்லி விட்டாள்.

"இன்னிக்கு ஒண்ணும் சாப்பிடலை. நேத்து இரவுதான் சோறு போட்டாங்க. பசிக்குதுன்னு சொன்னா அப்பா அடிப்பாரு..."

என்னுள் பீறிட்ட துயர வேதனையைக் காட்டிக்கொள்ளாமல் இருக்க முயன்றேன். பேச்சை மாற்றித் தர்ம சங்கடத்தைத் தவிர்க்க வேண்டும்...

நல்ல வேளையாக இதற்குள் பூரி, பொங்கல் வந்து விட்டது. குழந்தைகள் மௌனமாய்த் தட்டுக்களைக் காலி செய்தனர்.

கடலூர் போய்ச் சேர்ந்த போது இரவு மணி ஏழரை! பஸ் ஸ்டாண்டில் ஆட்டோ அமர்த்திக் கொண்டோம். உஷாவுக்கு அம்மா இருக்குமிடத்தின் விலாசம் தெரிந்திருந்தது.

ஆட்டோ இருட்டைக் கிழித்துக் கொண்டு புறப்பட்ட போது பின்னோக்கி வந்த காற்றில் சாராய வாடை கலந்திருந்தது. ஓட்டுனர் குடித்திருக்கிறார்!

நான் செய்வது எத்தகைய முட்டாள் தனம்! முன் பின் தெரியாத சிறுமிகளை அழைத்துக்கொண்டு பழக்கமில்லாத ஊரில் இப்படி இருட்டில் துணிந்து செல்கிறேனே. ஆட்டோ டிரைவரை நம்பலாமா? இந்தச் சிறுமி சரியான விலாசம் சொல்வாளா? சந்தேகங்கள் எழ எழ பயம் வயிற்றைக் கவ்விக் கொண்டது.

இதை உள்ளுணர்வால் புரிந்து கொண்ட தாலோ என்னவோ, "இன்னும் கொஞ்சம் தூரம்தான் ஆன்டி!" என்று என் கரம் தொட்டுச் சொன்னாள் உஷா.

பல இருட்டான வளைவுகளைக் கடந்து ஒரு மிகச் சாதாரண குடியிருப்பினுள் ஆட்டோ நுழைந்தது. ஓர் ஓட்டுக் கூரை வீட்டின் முன் வந்ததும் "இங்கேதான் இங்கேதான்" என்று சிறுமிகள் உற்சாகக் கூச்சலிட்டனர்.

வண்டியிலிருந்து இறங்கி விட்டு, ஐந்து நிமிடங்களுக்குள் திரும்புவதாகவும் திரும்பவும் பஸ் ஸ்டாண்ட் போக வேண்டும் என்றும் ஆட்டோ டிரைவரிடம் கூறிச் சிறுமிகளைப் பின்தொடர்ந்து சென்றேன்.

வீட்டுக் கதவைத் திறந்த பெண்மணிக்குத் திகைப்பு.

"எப்படி வந்தீங்க?" — ஒலித்த குரலில் மருந்துக்குக் கூட சந்தோஷம் தென்படவில்லை.

லதா ஓடிப் போய் அம்மாவின் கால்களைக் கட்டிக் கொண்டாள்.

"உஷா! என்னது இது பாதி ராத்திரியில்..." — ஒட்டிக் கொண்ட லதாவை விலக்கியபடி கேட்டாள் அந்தத் 'தாய்'.

"நீங்கள் யார்?" என்று என்னை நோக்கி விசிறப்பட்ட கேள்விக்கு உஷா பதில் சொன்னாள்.

இதற்குள் "கசி..." என்று அழைத்தபடி அங்கு வந்த ஆடவன் குழந்தைகளைப் பார்த்ததும் சட்டென்று நின்றான்.



மாதம் ஒரு தொகுதி

**திருச்சி — 2 தொகுதி வாசகர்களே! நினைவூட்டுகிறோம்!**

**உங்கள் தொகுதி பற்றிய நிறைகுறைகளையும் அதன் முன்னேற்றத்துக்கான யோசனைகளையும் எங்களுக்கு எழுதி அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: 6.7.90.**

**விரைவாக எழுதி, உங்கள் எம். எல். ஏ. வின் கவனத்தைக் கவரலாம்.**

**— ஆசிரியர்.**

"ஐயய்ய... இதுங்க வந்துடுச்சா...?" சலிப்பை மறைக்காமல் வெளியிட்டான் அவன்.

அவன் பேச்சும் கசியை அடுத்து அவன் நின்ற விதமும், கசியின் தோற்றமும் அந்தக் குழந்தைகளுக்குப் புரியாத விகார உண்மையை எனக்கு உணர்த்தின.

'ஐயோ! இங்கேயா இந்தப் பெண் பிள்ளைகளை விட்டுச் செல்ல வேண்டும்?' என்று பரிதவித்த மனத்தைச் சமாதானப் படுத்த முடியவில்லை. வேறு வழியின்றிச் சுருக்கமாக "நான் வர்றேங்க. உங்க குழந்தைகளை ஒப்படைச்சுட்டேன்" என்று கூறி விடைபெற்றேன்.

**— உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில் எழுதியவர்: ரதி.**







— மணியன் தர்மலிங்கம்.



# அதிசய பிறவி

பகுத்தறிவைக் கழற்றி வைத்துவிட்டுப் பாட்டிக் கதைக்கு 'உம்' கொட்டப் பக்குவப் படுத்திக் கொண்டு விட்டால் —

அப்புறம் ஒரே கொண்டாட்டம்தான்! சொர்க்க லோகம்தான். ரம்பையோடு டிஸ்கோதான். கூடு விட்டுக் கூடு பாய்ந்து சும்மா புகுந்து விளையாட வேண்டியது தான்!

காளை ரஜினி! செமை அடியாள். உள்ளூர்ப் பெரும்புள்ளிகள் நாகேஷ் — ஜெய்கணேஷ் இருவருமே ஒருத்தருக்கொருத் தர் உறவாடிக் கெடுக்கும் எதிரிகள். ஒருத்த ருக்கொருத்தர் தெரியாமல் ரஜினிக்குப் பணம் இறைத்து அடிபட்டுக் கொள்வது வேடிக்கை. இதில் சூபர்மேன் தனம் காட்டி ரஜினி சக்கைப் போடு போடுவது ரசிக மன்ற கும்பல் விசிலோசை தரத் தோதாய் இருக்கலாம்; நமக்குப் புதுசாய் இல்லை.

காளை ரஜினி கபரஸ்தான் போன பிறகு தர்மராஜாவை — வினு சக்கரவர்த் தியைச் சந்தித்துக் குறுக்கு விசாரணை செய்து சித்ரகுப்த வி. கே. ஆரைத் திருதிரு வென்று விழிக்க வைத்து, அஸிஸ்டெண்ட் விசித்ரகுப்த சோவின் தூண்டுதலில் (தான் சித்ரகுப்தனாக வேண்டும் — சோவுக்குப் பதவி மோகம்!) சும்மா ஜிவ்வென்று சிலிர்த் துக் கொண்டு, 'உங்களோட படா பேஜா ராய்ப் போச்சு. எனக்கு என் உடம்பு வேணும். அவ்வளவுதான். இல்லே, எங்கே பிரம்மா, எங்கே விஷ்ணு, எங்கே மஹேஸ் வரன்? நான் நியாயம் கேட்கிறேன்...' என்று ஆர்ப்பாட்டம் பண்ணுவது கலகல. அவரைத் திசை திருப்புவதற்காக ரம்பையை விட்டு ஆடச் செய்தால், மனிதர் அவர் ஆட்டத் தைப் பார்த்துவிட்டு, 'இன்னாம்மா டான்ஸ் ஆடறே நீ? அந்தக் காலத்து ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணி ஆட்டமா இன் னும் ஆடறது? ஒரு டிஸ்கோ, ஒரு பிரேக் ஆடத் தெரியாது?' என்று கேட்க, 'எனக்குக் கற்றுத் தருகிறீர்களா?' என்று அந்த மாதவி ரம்பையும் கெஞ்ச, இவர் சொல்லிக் கொடுத்துப் பாராட்டைப் பெற்று... அந்த எமலோகத்தையே ஒரு வழி பண்ணி விடுகிறார் போங்கள்!

விசித்ரகுப்த சோ கண்காணிப்பில் காளை ரஜினி, பாலு ரஜினி உடலில் புகுந்த பிறகு... பயந்தாங்கொள்ளி பாலுவிடம் பரி தாபக் காதல் கொண்ட கனகா, பாலுவுக்குள் புகுந்த காளையின் வீரதீரப் பராக்கிரமத் தில் விழி விரித்து, விதிர்விதிர்த்து நிற்பது ஜோர்!

ஆமாம், அந்த இன்னொரு காதலி — ஏதோ புதுமுகம் ஷீபாவாம். — இது மாதிரி ரகங்களைச் சோதனைக்கு எடுத்துக் கொள் ளவும் வேண்டாம்; நம்மைச் சோதனைக்கு உட்படுத்தவும் வேண்டாம்.

சோவென்றால் ஏதோ அரசியல் குத்தல் இருந்தே ஆக வேண்டும்; இல்லாவிட்டால் பாவம், ஏமாந்து போவார்கள் என்று பச்சாத் தாபப்பட்டது போல் பலவந்தமாய்ச் சில பரிபாஷைகளை நுழைத்திருக்கிறார்கள் —

மானாவாரியான பாடல்கள் — பெரும் பாலும் டூயட்கள். அவற்றில், 'ஆ...னந்த கும்மி கொட்டி... கும்மி கொட்டி...' என்று எழுந்த தெம்மாங்குக் கும்மியின் போது, 'அட, நம்ம இளையராஜா!' என்று அடை யாளம் காட்டுகிறார்.

இதெல்லாம் நடக்குமா என்ற சந்தேகம் எழும் கட்டங்களில் ரஜினி விருட்டென்று திரும்பி, 'அதை விடுங்க சார். நானொருத்தன் இங்கே இருக்கேன்லே? போதாதா?' என்கிறமாதிரி ஒரு முறைமுறைக் கிறார்.

— பி. எஸ். எஸ்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு,
எஸ். செல்வகணேஷ்

WRITE PIN CODE IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை
PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.

## மென்பட்டு மேனி காக்க எளிய குறிப்புகள்



டாக்டர் பாரதி ம

**கே:** என் வயது 21. நல்ல உடல் நலமிருந்தாலும், கண்ணுக்குக் கீழே கருப்பு வளையம் உள்ளது. உதவ முடியுமா?

**ப:** பொதுவாக தூக்கமின்மை, ஊட்டச் சத்துக் குறைவு காரணமாக கருப்பு வளையம் ஏற்படுகிறது. நிறைய தூங்குங்கள். தினமும் 8 டம்ளர் நீராவது குடியுங்கள். உணவில் பச்சைக் காய்கறி, பழங்களை சேர்த்திடுங்கள். வீட்டிலிருக்கையில், கண்ணை மூடி படுத்திருப்பது நல்லது. வெள்ளரித்துண்டு அல்லது உருளைக்கிழங்கு துண்டை (வேக வைத்து பஞ்சில் சுற்றி) கண்ணுக்குக் கீழே சில நிமிடங்களுக்கு ஒற்றி எடுக்கவும். பின் முகம் கழுவி விடவும்.

**கே:** நான் 40 வயது பெண். எனக்கு கன்னத்திலும், கண்ணுக்குக் கீழும் கருப்புத் திட்டு உள்ளது. இதற்கு இறுதி மாத விடாய் காரணமாக இருக்குமோ? நான் என்ன செய்வது?

**ப.** இறுதி மாத விடாயின் போது ஏற்படும் சருமத் தொல்லைகளுக்கு காரணம்—ஹார்மோன் சமச்சீராக இல்லாததே. நல்ல டாக்டரை அணுகவும். புரதச் சத்து உணவுகளான மீன், மட்டன், பருப்புகள், சோயாபீன் மற்றும் தானியம் ஆகியவற்றை உட்கொள்வது உதவியாக இருக்கும்.

**கே:** என் வயது 19. முகம் முழுவதும் கருப்புப்பரு. இது நீங்கி மென்மையழகுபெற என்ன செய்ய வேண்டும்?

**ப:** அழுக்கும், எண்ணெய்யும் சரும நுண்துளைகளை அடைத்துக் கொள்வதால் கருப்புப்பரு ஏற்படுகிறது. க்ளின்ஸரைப் பயன்படுத்தவும். தினமும் 4-5 முறை மென்மையான சோப் கொண்டு முகம் கழுவவும். ஒரு தேக்கரண்டி பன்னீர், ஒரு தேக்கரண்டி யூ-டி-கோலான் இரண்டையும் கலந்து, 2 மணி நேரத்திற்கொரு முறை மெல்லிய துணியால் துடைத்து வருவது நல்லது. நீராவி காட்டினால், பருக்கள் அதிகமாகிவிடும். மாறாக, ஒரு டவலை வெந்நீரில் முக்கி, பிழிந்து 2-3 முறை ஒத்தடம் தரலாம். நகக்குறி படாமல் பருக்களை இதமாக அழுத்தி வரவும். பிறகு, மென்மையான "ஆன்ட்டி-செப்டிக்" கொண்டு முகம் துடையுங்கள்.

**கே.** என் வயது 24. என் முகத்தில் உள்ள வெள்ளைப் பருக்களை போக்குவது எப்படி?

**ப:** கருப்பு பருக்களுக்கான சிகிச்சையே (மேல் உள்ளபடி) வெள்ளைப் பருக்களுக்கும் பொருந்தும். வெப்பப் பொருளைக் கொண்டு, மிகக் கடுமையான வெள்ளைப் பருக்களை குணப்படுத்த வேண்டியிருக்கும். அக் கருமையான பருக்களை அகற்றியபின் ஒரு தேக்கரண்டி புல்லரிசிக் கூழ், ஒரு தேக்கரண்டி துளசி, ஒரு தேக்கரண்டி பெல்லாயின் ஆகியவற்றைக் கலந்து தடவுங்கள். 10-15 நிமிடம் (நீண்ட நேரம் நல்லதல்ல) உலர்ந்தபின் சுத்த நீரில் முகம் கழுவுங்கள். அரிக்கும் சருமத்தையும், அடைபட்ட நுண் துளைகளையும் சரி செய்ய இது உதவுகிறது. கருப்புப் பருக்களை அகற்றிய பிறகும், இந்த முகக் காப்பு முறை (MASK) பலன் தரக்கூடிய

**கே:** 30 வயதாகும் எனக்கு கருப் வாடிய மேனி. கவர்ச்சியாக இ விரும்புகிறேன். ஆனால் என் மேனி மறுக்கிறது. எனக்கு உதவ முடியுமா?

**ப:** உங்கள் நிறத்தை விட மேனி வண்ண முக்கியமானது. தினசரி இரவில் உற முன் ஈரப்பதனம் செய்து சக்திமிக்க தடவுவதன் மூலம் உலர்ந்த சருமத் சிகிச்சை தரமுடியும். சோப்புகள்- வைக்கும் தன்மையானவை என் அடிக்கடி பயன்படுத்தக் கூடாது. க மாவை பவுடர் போலவோ, மென்மை சோப்புகளையோ பயன்படுத்தலாம்.

வாசகர்களே!

உங்கள் கேள்விகளை அனுப்ப வேண் முகவரி: Rexona-Tips on Skin (
P. O. Box No. 758, Bombay-4000